மனிதநேய மாண்பாளர் அமரர்

# துரை விஜயரெகுநாத பல்லவராயர்





## நினைவு மலர்

11-02-2000



திரு. விஜய ரவி பல்லவராயர் B.Com.,



திரு. விஜய ராஜசேகரன் பல்லவராயர் M.Com.,



திரு. விஜய முத்து மார்த்தாண்டன் பல்லவராயர் B.Sc.,

மு. கருணாநிதி
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள் 2.2.2000

## அணிந்துரை

புதுக்கோட்டை மாவட்டம் கரம்பக்குடியில் திரு. துரை. விஜயரகுநாத பல்லவராயர் அவர்களின் மணிமண்டபம் 11.2.2000 அன்று திறக்கப்படுவதனையொட்டி அவரது வரலாற்று நிகழ்ச்சிகள் அடங்கிய "நீதி தந்த நெஞ்சம்" எனும் பெயரில் சிறு நூல் ஒன்று வெளியிடப்படுவது பாராட்டத்தக்கது.

தமிழக ராஜீவ் காங்கிரஸ் கட்சியின் நிறுவனத் தலைவர் வாழப்பாடி திரு.கூ.இராமமூர்த்தி அவர்களின் அன்பிற்குரியவராகத் திகழ்ந்த திரு.துரை.விஜயரகுநாத பல்லவராயர் புதுக்கோட்டை மன்னர் குடும்பத்தின் நெருங்கிய உறவினர். இவர் சிறந்த விளையாட்டு வீரராகத் திகழ்ந்தவர். மனிதநேயச் சிந்தனை மிகுந்தவர். அத்துடன் சாதிமத பேதமற்ற சமத்துவ சிந்தனையும் வாய்க்கப்பெற்றவர். முள்ளங்குறிச்சி மாரியம்மன் கோவில் குடமுழுக்கினைத் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சார்ந்த மாவட்ட ஆட்சித் தலைவர் கையால் நிகழ்த்தச் செய்து புரட்சி செய்தவர் என்பது இவரது பெருமைக்கு ஓர் உரைகல். கரம்பக்குடி ஒன்றியத்தின் பெருந்தலைவராக விளங்கி அப்பகுதியின் வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றியுள்ள இவர், பேறிஞர் அண்ணா அவர்களிடமும், என்னிடமும் பேரன்பு கொண்டிருந்தார். இவரது முயற்சியால் வெட்டன்விடுதியில் அமைந்த உயர்நிலைப் பள்ளியைப் பேறிஞர் அண்ணா அவர்கள் திறந்து வைத்து இவரைப் பாராட்டியுள்ளார். இப்பெருமகனின் வாழ்க்கை வரலாறு இப்பகுதியில் பொதுத் தொண்டுகளில் ஈடுபடுபவர்களுக்கு எடுத்துக்காட்டாக அமையக்கூடியது.

இவரது சிறப்பான வாழ்க்கையின் அரிய நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் கூறிடும் இந்நூல் இளைஞர்களுக்கு ஊக்கமும், உற்சாகமும் அளித்திடும். இந்நூலை உருவாக்கியுள்ள விழா குழுவினர் அனைவருக்கும் என் பாராட்டுக்கள்.

(மு. கருணாநிதி)

# முன்னுரை

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

பேரன்புடையீர் ! வணக்கம் !!

மனிதருள் மாமனிதராம். எங்கள் அய்யா அவர்களது வாழ்க்கைப்பாதை மனிதாபிமானமுள்ள மனிதர்கள் அனைவரும் பின்பற்றக்கூடியதாகும். மனிதநேய மாண்பாளர் , நீதி அரசர், அய்யா என்று இப்பகுதி மக்களால் அன்போடு அழைக்கப்பட்ட துரை.விஜயரெகுநாத பல்லவராயர் அவர்கள் கரம்பக்குடியை தனித்தாலுக்கா ஆக்குவதற்ககாகச் சென்னை சென்ற போது அமரராகி விட்டார்.

பொது வாழ்வில் ஈடுபடுவோரும், தனிமனிதர்களும் அவரது வாழ்க்கை நெறியை பின்பற்ற வேண்டும் என்ற நல்ல நோக்கத்தில், இப்பகுதியிலுள்ள அனைத்து இனமக்களும், அனைத்து கட்சியினரும் அரசு ஊழியர்களும் ஒன்றிணைந்து மனிதநேய மாண்பாளர் அய்யா.துரை.விஜயரெகுநாத பல்லவராயரின் மணிமண்டபம், திருஉருவச்சிலை, நூலகம், அறக்கட்டளை அமைத்தும் அவரின் புகழ் நிலைக்கவும் - பரப்பவும் நினைவு மலர் ஒன்றையும் வெளியிட்டு உங்கள் கைகளில் தவழ்ந்து மணம் பரப்புகிறது.

எல்லா வகையிலும் இதற்கு ஒத்துழைப்புக் கொடுத்து ஆதரித்தும் - ஊக்கப்படுத்தியும் எங்களைத் தூண்டிய அனைவர்களுக்கும் எங்களது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்படிக்கு
மனிதநேய மாண்பாளர்
அமரர். துரை.விஜயரெகுநாத பல்லவராயர் நினைவு
மலர் வெளியீட்டுக்குழு
கரம்பக்குடி - 622 302
புதுக்கோட்டை மாவட்டம்

**அமரர், அய்யா. துரை. விஜயரெகுநாத பல்லவராயர்**
**மணிமண்டபம், திருவுருவச்சிலை, நூலக திறப்பு விழா,**
**மலர் வெளியீடு மற்றும் அறக்கட்டளை துவக்கம் உள்ளிட்ட**
**" ஐம்பெரும் விழா அழைப்பிதழ் !"**

நிகழ்ச்சி நிரல் :

| | | |
|---|---|---|
| நாள் | : | திருவள்ளுவர் ஆண்டு 2031 தை திங்கள் 28 ம் நாள் (11-02-2000) வெள்ளிக்கிழமை. |
| காலம் | : | காலை 11-00 மணி. |
| இடம் | : | திருவள்ளுவர் அரங்கம், கரம்பக்குடி. |
| மணிமண்டபம் மற்றும் திருவுருவச் சிலை திறந்து வைத்து விழா பேருரை | : | மாண்புமிகு தமிழக முதல்வர் ஐந்தமிழறிஞர் **டாக்டர். கலைஞர்** அவர்கள் |
| தலைமை | : | முன்னாள் மத்திய அமைச்சர் மாண்புமிகு **வாழப்பாடியார்** அவர்கள் (தலைவர், தமிழக ராஜீவ் காங்கிரஸ்) |
| முன்னிலை | : | மாண்புமிகு **எஸ். திருநாவுக்கரசு,** M.A.B.L., அவர்கள் (புதுக்கோட்டை நாடாளுமன்ற உறுப்பினர்) |
| வரவேற்புரை | : | உயர்திரு. **க. சிதம்பரம்** அவர்கள் (தி.மு.க. மாவட்ட செயலாளர், புதுக்கோட்டை) |
| சிறப்புரையாளர்கள் | : | மாண்புமிகு **ஆற்காடு வீராசாமி** அவர்கள் (மின் துறை அமைச்சர்)<br>மாண்புமிகு **கோ. சி. மணி** அவர்கள் (உள்ளாட்சி துறை அமைச்சர்)<br>மாண்புமிகு **கா.நா. நேரு** அவர்கள் (கூட்டுறவு துறை அமைச்சர்)<br>திருமிகு **எஸ்.எஸ். பழனிமாணிக்கம்,** M.A.B.L., அவர்கள் (தஞ்சை நாடாளுமன்ற உறுப்பினர்) |

திருமிகு A. வெங்கிடாசலம் அவர்கள்
(ஆலங்குடி சட்டமன்ற உறுப்பினர் )
திருமிகு இராசு. கவிதைபித்தன் அவர்கள்
(குளத்தூர் சட்டமன்ற உறுப்பினர்)
திருமிகு M. இராமச்சந்திரன் அவர்கள்
(திருவோணம் சட்டமன்ற உறுப்பினர்)

திருமிகு பே. மாரியய்யா அவர்கள்
(புதுகை சட்டமன்ற உறுப்பினர்)
திருமிகு V. சின்னையா அவர்கள்
(திருமயம் சட்டமன்ற உறுப்பினர்)
திருமிகு S.N.M. உபயத்துல்லா அவர்கள்
( தஞ்சை சட்டமன்ற உறுப்பினர்)
திருமிகு R. சேவியர் அவர்கள்
(தலைவர். மாவட்ட வர்த்தக சங்கம், புதுக்கோட்டை)
மற்றும் மாவட்ட, ஒன்றிய, நகர சர்வ கட்சித் தலைவர்கள்.

| | | |
|---|---|---|
| நன்றியுரை | : | திருமிகு G. முத்தைய்யா அவர்கள் (அமைப்பாளர், மணிமண்டபக்குழு, கரம்பக்குடி) |

இன்னணம்,
மணிமண்டபக்குழு, சர்வ கட்சியினர்
மற்றும் பொதுமக்கள்,
கரம்பக்குடி.

## தமிழக ராஜீவ் காங்கிரஸ் தலைவர்
## முன்னாள் மத்திய பெட்ரோலியத்துறை அமைச்சர்
## தலைவர் வாழப்பாடியார்

# வாழ்த்துச் செய்தி

தமிழக ராஜிவ் காங்கிரஸ் மாநில துணைத் தலைவரும், மாவட்டத் தலைவரும், சிறந்த தேசபக்தச் செம்மலும், எனது அருமை நண்பருமான திரு.விஜயரகுநாத பல்லவராயர் அவர்களின் முதலாம் ஆண்டு நிறைவுநாள், இம்மாதம் 11ஆம் தேதி வருகிறது. இந்த நாளில் அவரது சொந்த ஊரான கரம்பக்குடியில் அவர் பெயரால் மணிமண்டபமும், நூலகமும், அவரது திருவுருவச் சிலையும் தமிழக முதல்வர் முத்தமிழறிஞர் டாக்டர் கலைஞர் அவர்களால் திறந்து வைக்கப்படுகிற மகத்தான விழா, புத்தாயிரம் ஆண்டின் துவக்கத்தில் நடைபெறுகிறது என்பதில் நான் மிகுந்த பெருமிதம் கொள்கிறேன். இவ்விழாவில் நானும், ஏனைய அரசியல் கட்சித் தலைவர்களும் பங்கேற்கிறோம்.

புதிய நூற்றாண்டில் குமரிமுனையில் அய்யன் திருவள்ளுவருக்கு சிலை திறந்து வைத்த, நமது தேசிய ஜனநாயகக் கூட்டணியின் தமிழகத் தலைவர் - முதல்வர் கலைஞர் அவர்கள் அடுத்த சிலையாக புதுக்கோட்டை வரலாற்று மண்ணில் கரம்பக்குடி சேர்மன், எங்கள் கட்சியின் மாவட்டத் தலைவர் - தமிழ்ச் சான்றோன் விஜயரகுநாத பல்லவராயருக்கு சிலை திறப்பது தமிழக வரலாற்றில் சிறப்பான அத்தியாயமாகும். எடுப்பான அவரது வரலாற்றை எண்ணிப் பார்த்தால் இது தமிழகத்திற்குச் சிறப்பும், தமிழகப் பொது வாழ்விற்கு மரியாதையும், பொதுவாக தேசியப் பண்புமிக்க மனிதநேயச் சீராளனுக்குச் சிறப்புச் சேர்க்கும் கடமை நிறைவேறுகிறது என்பதில் எனக்கு உள்ளபடியே மனநிறைவு ஏற்படுகிறது.

திரு.பல்லவராயர் பாரம்பரியச் சிறப்புமிக்க புதுக்கோட்டை ராஜ குடும்பத்தில் பிறந்தவர். இளமைக் காலத்திலேயே கல்வி, வீரம், விளையாட்டு, வள்ளல் தன்மை இவற்றால் இயல்போடு வளர்ந்தவர். கல்லூரிக் காளையாக இருந்த போது அவர் தேசிய இயக்கத்தில் ஈர்க்கப்பட்டு தேச முன்னேற்றம், வட்டார வளர்ச்சி என்று பொது வாழ்க்கையில் ஆர்வத்தோடும், துடிப்போடும் விளங்கினார். கிராம அளவில் தொடங்கி மாவட்ட அளவில் வரை உள்ளாட்சி மன்றங்களில் பல பதவிகளை வகித்து அனைத்துப் பகுதி மக்களுக்கும் மனித நேயத்தோடு தொண்டாற்றி ''கரம்பக்குடி சேர்மன்'' என்று அனைவராலும் அன்போடு அழைக்கப்பட்டார்.

தனது வட்டாரத்தில் ஏராளமான கல்விக் கூடங்களைத் திறந்து நன்கொடை பெறாமலும், இவரே ஏழைகளுக்கு உதவி செய்து அந்த வட்டாரத்தில் தன்னந்தனி மனிதராக கல்விப் புரட்சி நிகழ்த்தினார். இத்தகையப் பள்ளிகளில் அந்தக் காலத்திலேயே தமிழ் உணர்வோடு பொங்கல் திருநாட்களை மகிழ்ச்சியோடு நடத்தியும், ஏழைகளுக்குப் பரிசளித்தும், கலை நிகழ்ச்சிகளையும், வீர விளையாட்டுகளையும் நடத்தி மக்களை மகிழவைப்பார்.

மகளிர் முன்னேற்றம் கருதி கரம்பக்குடியில் மகளிர்க்கென்றே உயர்நிலைப் பள்ளித் தொடங்கிப் பெண்கள் முன்னேற்றத்திற்கு வழி வகுத்தார்.

தீண்டாமை ஒழிப்பிலும் அவர் துணிவோடு பாடுபட்டார். தனது பகுதியில் முள்ளங்குறிச்சி ஸ்ரீ மாரியம்மன் கோயில் கும்பாபிஷேகத்தை, 'யாரை அழைத்து நடத்துவது? சங்கராச்சாரியாரையா? குன்றக்குடி அடிகளாரையா?' என்றெல்லாம் பல பிரமுகர்களும் கேட்டபோது, பல்லவராயர், மாவட்ட ஆட்சித் தலைவர் செல்வம் அவர்களை அழைத்து கோபுரத்தின் மேல் ஏற்றி கையிலே புனித நீர் குடத்தைக் கொடுத்து, மந்திரங்கள் ஓதக் கம்பத்தில் தண்ணீரை ஊற்ற வைத்தார். இதில் என்ன சிறப்பு என்றால் - புரட்சி என்றே சொல்லலாம். மாவட்ட ஆட்சித் தலைவர் செல்வம், தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர். இப்படி ஆன்மீகத்திலும் புரட்சி எண்ணங்களைக் கொண்டிருந்தார்.

இவருடைய வட்டாரத்தில் சாதாரண நடுத்தர - ஏழை மக்களின் நல்லது கெட்டதுகளில் பங்கேற்று, வள்ளல் தன்மையோடு உதவியவர்.

தேசிய உணர்வுமிக்கவர். காந்திஜி, நேருஜி, பெருந்தலைவர் காமராஜர், தலைவர் ராஜிவ் காந்தி ஆகியோரிடம் ஆழ்ந்த பற்று கொண்டிருந்தவர். தலைவர் ராஜிவ் காந்தி கொலையுண்ட போது துக்கம் தாளாது, இரண்டு நாட்கள் உணவு அருந்தாது வருத்தத்தில் ஆழ்ந்திருந்தார்.

காங்கிரஸ் பலவாறாக பிரிந்து நின்றாலும், திரு.பல்லவராயர் என்னோடு உறுதியாக நின்று உணர்வோடும், துடிப்போடும் பணியாற்றினார். தமிழக ராஜிவ் காங்கிரஸ் தொடங்கப்பட்ட போது மாநில துணைத் தலைவராகவும், மாவட்டத் தலைவராகவும் பொறுப்பேற்று புதுகை மாவட்டத்தில் எண்ணற்ற தேசிய நிகழ்ச்சிகளைச் சிறப்பாக நடத்தி, தோழமை உணர்வோடு கட்சியினரை அரவணைத்து இயக்கம் வளர்த்தார்.

அத்தகைய பெருந்தகையாளர் ஓராண்டுக்கு முன் திடீரென்று மறைவு எய்தினார் என்ற செய்தி கேட்டு என் மனம் துடிதுடித்தது. ஒரு மிகச் சிறந்த தேசப் பக்தரை,

தமிழக ராஜிவ் காங்கிரசின் முன்னோடியை, மனிதப் பண்பாளரை இழந்த துயரம் என்னையும், எனது கட்சியினரையும் வாட்டியது.

பொது வாழ்விற்கு எடுத்துக் காட்டான இவர் போன்ற மாமனிதர்களை நாடு மறவாது போற்ற வேண்டும். அந்த வகையில் அவருக்கு அவர் பிறந்த கரம்பக்குடி புனித மண்ணில் அருமை நண்பர் பல்லவராயருக்கு மணிமண்டபம் கட்டி, நூலகம் அமைத்து திருவுருவச் சிலையும் திறந்திடும் பிப்ரவரி 11 புனிதநாள். இதில் எனக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி. இரட்டிப்புப் பெருமை. எனது மரியாதைக்குரிய தலைவர் - தமிழக முதல்வர் - முத்தமிழறிஞர் - டாக்டர் கலைஞர் அவர்களின் திருக்கரத்தால் நண்பர் பல்லவராயரின் மணிமண்டபம் திறந்து வைக்கப்படுவது புதுகை மாவட்டத்திற்கு மட்டுமின்றி, நம் தாய்த் தமிழகத்திற்கே பெருமை சேர்ப்பதாகும். தேசியத்திற்குக் கிடைத்த பெரும் சிறப்பாகும்.

**திருநாவுக்கரசு,** M.A., B.L.,
Member of Parliament
(Lok Sabha)
Pudukkottai (Const)
Tamil Nadu

# வாழ்த்துச் செய்தி

கரம்பக்குடி ஊராட்சி ஒன்றியத்தின் முன்னாள் பெருந் தலைவரும், தமிழக ராஜீவ் காங்கிரஸ் மாநில துணைத் தலைவரும் இப் பகுதி மக்களின் பேரன்பிற்கும் உரியவருமான அமரர் திரு.துரை விஜய ரகுநாத பல்லவராயர் அவர்களின் மணி மண்டபம் திறப்பு மற்றும் முழு திருவுருவச் சிலை திறப்பு ஆகியனவற்றையொட்டி சிறப்பு மலர் ஒன்று வெளியிடுவதை அறிந்து மகிழ்ச்சி அடைகிறேன். மலர் இவருடைய புகழ் பரப்பும் விதத்தில் பயன் உள்ள வகையில் சிறப்புடன் மலர்ந்திட மனமார்ந்த நல்வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறேன்.

அமரர் அண்ணன் பல்லவராயர் அவர்கள் பொது வாழ்விலும், பொது தொண்டிலும் தன்னை முழுமையாய் ஈடுபடுத்திக் கொண்டு கடந்த 40 ஆண்டுகளுக்கு மேலாக கரம்பக்குடி ஒன்றியம், ஆலங்குடி தொகுதி மட்டுமின்றி புதுக்கோட்டை மாவட்ட மக்களின் இன்ப, துன்பங்களில் பங்கேற்கக் கூடியவராக சிறப்புடன் பணியாற்றியவர் எனும் பெருமைக்குரியவர். ஜாதி, மத வேறுபாடின்றி அனைத்துத் தரப்பு மக்களின் பேரன்பிற்கு பாத்திரமாய் திகழ்ந்தவர். எளிமையும் அடக்கமும் நிறைந்தவர். பொது வாழ்வில் மிகுந்த நேர்மை உடையவராக வாழ்ந்தவர் அனைவரிடமும் அன்போடும் நயத்தகு நாகரீகத்தோடும் பழகக் கூடியவர் சிறந்த பண்பாளர்.

பொதுவாக புதுக்கோட்டை மாவட்ட மக்களின் நல்வாழ்விற்கு பாடுபட்டு வந்த திரு.பல்லவராயர் அவர்கள் தான் பிறந்து வளர்ந்த பகுதியான கரம்பக்குடி பகுதியை மக்கள் நலனுக்காகவும், வசதிக்காகவும், தனித் தாலுக்கா ஆக்க வேண்டும் என்பதற்கான முயற்சியை மேற்கொண்டு இப்பகுதி அனைத்து கட்சிகளின் பிரதிநிதிகளோடு இந்நோக்கத்தை நிறைவேற்றுவதற்காக சென்னைக்கு வந்த வழியில்தான் விபத்தில் சிக்கி இயற்கை எய்தினார். கரம்பக்குடி பகுதியை உள்ளடக்கி கரம்பக்குடி தனித் தாலுக்கா உருவாக்கிட அமரர் பல்லவராயர் அவர்கள் கண்ட கனவை, அவரது இலட்சியத்தை தமிழக அரசிடம் குறிப்பாக மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களிடம் எடுத்துக் கூறியதோடு, நான் சட்டமன்ற உறுப்பினராக இருந்த போது சட்டமன்றத்திலும் இது குறித்து பேசி நடவடிக்கை மேற்கொண்டுள்ளேன். திரு.பல்லவராயர் அவர்களின் நினைவை

போற்றும் வகையில் அவரது மணி மண்டபமும், அவரது திருவுருவச் சிலை அவரது பெயரால் மக்களுக்கு பயன்பட நூலகமும், மக்களுக்கு தொண்டு செ அறக்கட்டளையும் நிறுவப்படும் இவ்வேளையில் அவர் உருவாக்க விரு கரம்பக்குடி தாலுக்காவை ஏற்படுத்தித் தந்திட நாடாளுமன்ற உறுப்பினர் என் விதத்தில் முயற்சிப்பேன் என உறுதியளிக்கிறேன்.

அமரர் பல்லவராயர் அவர்களின் புகழ் வாழ்க, சிறப்பு மலருக்கும், நடை உள்ள சிறப்பான விழாவிற்கும் என் மனமார்ந்த நல்வாழ்த்துக்களை எம்.ஜி. அண்ணா தி.மு.கழகத்தின் சார்பிலும், என் சார்பிலும் தெரிவித்துக் கொள்கிறே

ஃ
சிவமயம்

ஸ்ரீ லஸ்ரீ சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி
குரு மகாசந்நிதானம்
திருக்கயிலாய பரம்பரைத்
திருவாவடுதுறை ஆதீனம்



திருவாவடுதுறை - 609 803
( தஞ்சை மாவட்டம் )
தொலைபேசி எண். ஆடுதுறை – 2021

நாள் 16.10.99

"நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்னெஞ்சில நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அனேகன் இறைவன் அடிவாழ்க"

## "ஆசி உரை"

செயற்கரிய செய்வார் பெரியார் எனத் திருவள்ளுவர், பெருமைமிகு நற்செயலைப் போற்றிப் புகல்வதற்கு ஏற்ப, தோன்றியதின் பெருமையை உணர்த்திய நல்லவர்களுள், தன்னலங்கருதாத் தகைமையுடைய பெருந்தகையாளர், அமரர் துரை, விஜயரெகுநாத பல்லவராயர் அவர்களின் பணி நலத்தினைப் பாராட்டிப் போற்றியும், சிவ நலம் போற்றியும், சமுதாயச் செம்மலாயும் சிறந்தோங்கிய, ஐயா அவர்களுக்கு முழு உருவச்சிலை வடித்து அமைத்து அழகிய மணி மண்டபமும், நிறுவி, அவரது புகழை சிறப்பாகச் சிந்தித்தும் நல்லபல அறிஞர் பெருமக்களைக் கொண்டு சிந்திக்கச் செய்தும், அவரது நினைவாக விழா மலர் ஒன்று மலரஇருப்பது கானபெருமகிழ்வடைகின்றோம்.

விழாமலர் பல அறிஞர் பெருமக்களின் நல்லபடைப்புக்களைக் கொண்டு நல்மணம் வீசி புகழ் பெருகி சிறப்பெய்த, நம் வழிபடு மூர்த்தியாம் அருள்தரு ஞானமா நடராஜப் பெருமான் திருவடி மலர்களைச் சிந்திக்கின்றோம்.

** அருளாணையின் வண்ணம் **
சுப்பிரமணியதம்பிரான்

முகவரி: த. அருள்மொழி, அவர்கள்
மனிதநேய மாண்பாளர், அமரர்
துரை. விஜயரெகுநாத பல்லவராயர்,
மணிமண்டபம்.
மலர் வெளியீட்டுக்குழு,
கரம்பக்குடி, புதுக்கோட்டை மாவட்டம்.




மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்லகதிக்கு யாதுமோர் குறைவிலைக்
கண்ணில் நல்லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே.

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தர்

உ
குருபாதம்


...பரம்பரைத் தருமை ஆதீனம்
...குருமகாசந்நிதானம்
...சண்முக தேசிக ஞானசம்பந்த
...ராசாரிய சுவாமிகள்

தருமபுரம்
மயிலாடுதுறை (அஞ்சல்) 609001


6-9-1999.

" ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே. "

புதுக்கோட்டை மாவட்டம் கரம்பக்குடி அமரர் துரை. விஜய ரெகுநாத பல்லவராயர் நினைவு மணி மண்டப விழா நிகழ்வது மகிழ்ச்சிக்குரியது.

உலகப் பிறவிகள் ஏழு பிறவியில் அனுபவிக்கும் பயன் பிற ஏழு பிறப்புக்களுக்கும் பயன் உடையதாக அமையும் வகையில் உள்ளது. கல்வி ஒன்றுதான்.

"ஒருமைக் கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து"

என்பது வள்ளுவர் வாக்கு.

இதனை நன்கு உணர்ந்த விஜய ரெகுநாத பல்லவராயர் கல்விப் பணிகள் பல நிகழ்த்தி கல்விக்குக் காவலராய்யும், மனித நல்லிணக்க மாந்தராகவும், சமய, சமூக சேவகராகவும் திகழ்ந்துள்ளமை பெருமைக்குரியது.

இவர் தம் பணிகளை நினைவு கூரும் வகையில் அன்பர்கள் பலரும் கூடி கரம்பக் குடியில் இவரின் உருவச் சிலையுடன் கூடிய மணிமண்டபம் அமைப்பதும், விழா மலர் வெளியிடுவதும் பாராட்டிற்குரியது.

மணிமண்டபம் பொலிவு பெற்று விளங்கவும், விழா மலர் சிறக்கவும், விழா குழுவினரும், விழாவில் பங்கு பெறுபவர்களும் மற்றும் அன்பர்கள் அனைவரும் எல்லா நலமும் பெற்று நீடுழி வாழவும் ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

சிவபெருமான் பேரருள்



புனித மிக்க



# ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்

292 ஆவது குருமகாசன்னிதானம் & ஆதீனகர்த்தர்

# மதுரை ஆதீனம்




தொலைவரி : 'ஆதீனம்' மதுரை
தொலைபேசி : 747474
: 747475
திருச்செந்தூர் கிளை : 04639 - 45419

70, தெற்காவணி மூல வீதி, மதுரை - 625 001.

பரம்பரை அறங்காவலர்



அருள்மிகு அக்னீசுவரசுவாமி திருக்கோயில்,
கஞ்சனூர்.
தஞ்சை மாவட்டம்.



அருள்மிகு சாட்சிநாதசுவாமி திருக்கோயில்,
திருப்புறம்பியம்.
தஞ்சை மாவட்டம்.



அருள்மிகு கைச்சின்னேசுவரசுவாமி திருக்கோயில்,
கச்சனம்.
தஞ்சை மாவட்டம்.



அருள்மிகு பன்னகாபரமேசுவரசுவாமி திருக்கோயில்,
பன்னத்தெரு.
தஞ்சை மாவட்டம்.



தலைவர்,
திருவருள் தவநெறி மன்றம்.



நிறுவனத் தலைவர்,
அருளாட்சிக் கழகம்.

நாள் : 13-8-99

திரு. கவிஞர். த. அருள்மொழி,
கரம்பக்குடி
புதுக்கோட்டை மாவட்டம்.

அன்புடையீர்,

ஆசீர்வாதம்.

தாங்கள் அன்புடன் அனுப்பிய மடல் கண்டு மகிழ்ந்தோம்.
கரம்பக்குடியில் அமரர் கரை. விஜயரெகுநாத பல்லவராயருக்கு மணி மண்டபமும், முழு உருவச் சிலை திறப்பு விழாவும் அறுசமயம் மலர் வெளியீட்டு விழாவும் நடைபெறுவது அறிந்து மகிழ்ச்சி கொள்வதோடு, இவ்விழாக்கள் சீரோடும், சிறப்போடும் நடைபெற்றிடவும், விழாக் குழுவினர் அனைவரும் வாழ்வில் எல்லா வளங்களும், நலங்களும் பெற்று இன்புற்று வாழ்ந்திடவும், அவருடைய எண்ணங்கள், முயற்சிகள் அனைத்தையும் விழாக் குழுவினர் விரைந்தே நிறைவேற்றி மக்கள் பணி செய்திடவும் திருவருள் பாலிக்குமாறு எல்லாம் வல்ல எமது நிரந்தரத் தாய் தந்தையாகிய சிவபெருமானைப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கின்றோம்.

எல்லோருக்கும் ஆசீர்வாதம்.

ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்.
13/08/99

RAJAGOPAL TONDAIMAN



**PUDUKKOTTAI PALACE**
No. 4, Collector's Office Road,
Cantonment, Tiruchirappalli - 620 001.
Ph : 411587, 410514

Date :....................



ராஜ ராஜகோபால் தொண்டைமான்

அமரர் துரை விஜய ரெகுநாத பல்லவராயர் அவர்களுக்கு கரம்பக்குடி பொதுமக்களின் சார்பில் அவரின் நினைவாக அவரின் உருவச்சிலை நிறுவியும் மணிமண்டபம் ஒன்று கட்டியும் அது சமயம் அவர் நினைவைப் போற்றும் வகையில் மலர் ஒன்று வெளியிடுவதும் அறிய பெரும் மகிழ்ச்சி அடைகிறேன்.

என் தந்தை மறைந்த மாமன்னரின் தாயார், திரு பல்லவராயரின் குடும்பத்தை சேர்ந்த பிலாவிடுதியில் இருந்து வந்தவர்கள். அதனாலேயே திரு.பல்லவராயர் அவர்கள் மாமா முறைவேண்டும். பெயரளவில் சொந்தக்காரராக இல்லாமல் எங்கள் குடும்ப நலனில் மிகுந்த அக்கரை கொண்டு அவ்வப்போது தகுந்த ஆலோசனை அளித்து பெரிதும் உதவியாக இருந்தார், குறிப்பாக என் தந்தை மாமன்னர் ராஜா ராஜகோபால தொண்டைமான் அவர்கள் இறந்தப்பிறகு எங்களுக்கு உதவியாகவும் உறுதுணையாகவும் இருந்தார். அவர்கள் காலமானது குறிப்பாக எங்களுக்குப் பேரிழப்பாகும். மிகச்சிறந்த பண்பாளர். எல்லோருக்கும் எந்தச் சமயத்திலும் உதவி செய்யக்கூடிய குணமும் மனமும் படைத்தவர். என்தந்தை மறைந்த மாமன்னர் ராஜா ராஜகோபல தொண்டைமான் அவர்கள் இவரிடம் மிகுந்த அன்பும், நம்பிக்கையும் வைத்திருந்தார்கள். அவர்கள் நெடுங்காலம் வாழ்ந்திருந்து எங்களுக்கு உறுதுணையாக இருப்பார் என்றே எண்ணியிருந்தோம். திரு. பல்லவராயர் அவர்கள் கரம்பகுடி பஞ்சாயத்து பெருந்தலைவராக இருந்து, அங்குள்ள மக்களுக்கு சிறந்த பணியற்றியவர். தன் கடைசி காலம் வரை, அரசியல் வியாபாரிகளிடம் விலை போகாமல், கொண்ட கொள்கையே பெரிதென்று, தன்னை நாடி வந்த பதவிகளை துச்சமென்று உதறியவர். என்றும் உண்மையே பேசியவர். மக்கள் தொண்டே பெரிதென்று நினைத்தவர். அத்தகைய பெருமகனாரை இந்த கால கட்டத்தில் கண்டு பிடிப்பது துர்லபம். நல்லவர்களை இறைவன் சீக்கிரமே தன்னிடம் அழைத்துக் கொள்கிறான் என்று சொல்வது உண்மை போலும். தன்னலம் கருதாமல் பொது நலமே தன் வாழ்க்கையின் தலை சிறந்த கடமை என்று எண்ணி செயலாற்றிய ஒருவருக்கு அவரின் நினைவாக சிலை நிறுவியும் மணி மண்டபமும் கட்டும் கரம்பக்குடி பொதுமக்களுக்கு என் நன்றியும் இதயம் கனிந்த வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

திரு. பல்லவராயர் புகழ் என்றும் நிலைத்திருக்கட்டும்.
அவர் புகழ் ஓங்குக.

வணக்கம்

**K.T.VANDAYAR**

POONDI - 613 502.

21-8-1999

கடமையைச் செய்து பலனை எதிர்ப் பார்க்காதவர்.

அகமிருந்தும் எளிமையாய் நடமாடியவர். நட்பை உளமாறப்

போற்றிப் பழகியவர். அவர் பேச்சிலே இனிமை. நடத்தையில்

பெருமை. செய்கைப் பகுதியிலே செம்மை! கி.பி. பல்லவராயர்

உருத்தி கொண்ட இலக்கு.

நல்ல குடும்பம். அதற் கேற்ற குலம்.

பழுதிலா ஒழுக்கம். இவைகள் அவர் அந்திகம், உரம்

மண்பற்றினால் அகம் தேடி வரும். குடும்பம் நிம்மதியாக வாழும்.

உழைப்பு ஆக்கம். உண்மை தெளிவு.

நாகரிகம் நாணயம். கி.பி. பல்லவராயரின் அகராதி.

அவர் புகழ் மற்றவர் கண்டு வழிகாட்டட்டும்.

அன்பு.

கி. தி. வாண்டையார்.

**D. Murugaraj** I.A.S.(Retd.)
Chairman
Tamil Nadu Public Service
Commission, Chennai - 600 002.




Government Estate,
Anna Salai, Chennai - 600 002.
Ph : 562420, 568091-568095
Fax : 581893

Dated 11.08.99.

பெறுநர்

சி.வெங்கடாசல நாயுடு,
முன்னாள் ஊராட்சி மன்றத்தலைவர்,
பாப்பாபட்டி,
காடம்பட்டி அஞ்சல்,
கரம்பக்குடி ஒன்றியம்,
அ.கு.எண். 622 302.



அன்புடையீர்,

" புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும் "

எனும் வள்ளுவன் வாக்கிற்கு இலக்கியமாய் வாழ்ந்த அன்பு நண்பர் திரு.துரை.விஜயரெகுநாத பல்லவராயர் அவர்கள் நினைவாக, அவர் ஊராட்சி ஒன்றியத் தலைவராகப் பத்து ஆண்டுகள் அனைவரும் போற்றும் வகையில் பணியாற்றிய கரம்பக்குடியில் ஒரு மணி மண்டபம் அமைப்பது மிகவும் பொருத்தமானதாகும். மற்றும் அம்மணி மண்டபத்தில் அவரது முழு உருவ வெண்கலச் சிலை அமைப்பது அந்நல்லவரது நினைவை என்றும் போற்றத் தக்கதாக அமையும். இம்முயற்சி மேற்கொண்ட அனைவரும் பாராட்டுக்குரியவர்கள்.

தங்கள் அன்புள்ள,

(த.முருகராஜ்).




**K. Ayyaru Vandayar**, B.A.,
"HOUSE OF POONDI"
No.1, Vallam Road,
THANJAVUR - 613 007.



© 37707

Date : ........................

**கலியுகம் கண்ட ராமனாம்**

**கடைநிலை ஊழியர்க்கு காவலனாம்**

**கடமையில் பாரத கண்ணனாம்**

**குறிக்கோளில் வில்வித்தை அர்ச்சுனனாம்**

**குற்றத்தில் தண்டனை மனு நீதிச் சோழனாம்**

**ஏழைகளின் காவல் தெய்வமாம்**

**பொதுவாழ்வில் பொறுமை பொக்கிஷமாம்**

**இவ்வுலகில் உன் பணி போதுமென்று**

**காலதேவன் கண்டும் அழைத்துக் கொண்டான்**

**இவ்வுலகில் உன் சரித்திரம் காட்ட**

**மணிமண்டபம் அமைத்தோம்**

**இவ்வுலகிலும் உங்கள் புகழ் ஓங்குக**

**உங்கள் நினைவில் வாழ்கிறோம்.**




இந்திய கம்யூனிஸ்ட் கட்சி

புதுக்கோட்டை மாவட்டக் குழு

அலுவலகம் - 20400
வீடு - 26233

எண்: 5, சாந்தநாதபுரம், 6-ஆம் வீதி, புதுக்கோட்டை - 622 001

எஸ். இராசசேகரன்,
மாவட்டச் செயலாளர்,


தேதி:..................

எஸ். இராசசேகரன்,
மாவட்டச் செயலாளர்.

மலர் வெளியீட்டுக் குழு: கறம்பக்குடி.

" மனித நேய மாண்பாளர் " என போற்றப்படுகின்ற திரு. துரை. விஜய ரெகுநாத பல்லவராயர் அவர்கள் மக்கள் பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டவர்.

எங்கேயேனும் பிரச்சனையும், தகராறும் ஏற்படுமாயின் அங்கு சமாதானம் நிலவவேண்டும் என்பதற்காக பாடுபட்டார். சமாதான முயற்சிக்கு முன்னிலையில் நின்று செயல்பட்டிருக்கிறார். சமாதானத்தையும் அமைதியையும் விரும்பியவர்.

அரச குடும்பத்தில் பிறந்து கீழ்த்தட்டு மக்களிடமும் மிக அன்பாக நேசமாக பழகியவர். மிக எளிமையாக எல்லோரிடமும் பழகிய பண்பாளர்.

கறம்பக்குடியை தனித் தாலுகா - வருவாய் வட்டாச்சியர் அலுவலகம் அமைக்க முயன்றார். அதற்காகப் பாடுபட்டார். அந்த முயற்சியிலேயே தன் இன்னுயிரை ஈந்துள்ளார். அவர் மேற்கொண்ட வருவாய் வட்டாச்சியர் அலுவலகம் அமைப்பதும் அவர் மேற்கொண்ட நன்னெறியை போற்றுவதும் நம் கடமை.

கறம்பக்குடியில் தனித்தாலுகா அமைய வேண்டும் என்பதில் என் போன்றவர்களின் பங்களிப்பும் இருக்கும், தனித் தாலுகா அமையும் என்ற வாழ்த்துதலோடு அன்னாரின் நல்ல பண்புகளை நினைவு கூறுகிறேன்.

அன்புடன்.

எஸ். இராசசேகரன்
27/12/1999





RAJ.THIRUVENGADAM
HONY.STATE SECRETARY TSNBAA &
PUDUKKOTTAI DISTRICT AMATUER,
ATHLETIC SECRETARY.





A HEART FULL THOUGHTS

IT IS VERY DEEPLY SORROW TO WRITE ABOUT THAT A SOUL,HELPING HAND TO THE PUBLIC WITHOUT ANY DIFFERENCE WHO LEFT US ON 11.02.99.

MR.VIJAYA RAGUNATHA PALLAVARAYER WHO WAS MY BROTHER-IN LAW AND SON OF MR.DURAISAMY PALLAVARAYER AND WHO USED TO DO THE WORK WITHOUT EXPECTING ANY MONITARY HELP AND NEVER SEEN ANY CAST AND CREEDS.

HE WAS A SPORTS MEN WHO PLAYED FOOTBALL WITH HIGHNESS FAMILIES IN THE S.V.R.M.FOOTBALL CLUB PUDUKKOTTAI AND STUDENT'S CLUB TRICHY AND ESTABLISHED HIS NAME.

EVEN SOMETIMES WHEN WE MET HE WILL BE ENGUIRE ABOUT THE PRESENT ACTIVITIES OF SPORTS AND USED TO ADVICE VERY VALUABLE HELP FOR MY FUTURE CARRIER.

WE GOT SOME MORE PLAN TO IMPROVE OF DISTRICTS THROUGH HIS GUIDENS AND WE ARE NOT SO LUCKY ENOUGH TOUSE HIM.

AS EVERYBODY KNOWS THAT BECAUSE OF HIS PUBLIC HELP. HE STARTED TO MEET CHIEF MINISTER REGARDING OF THE IS OWN PLACES TO DISTRICTS.

ON THAT DAY 29.01.99 HIS FATE WAS DRAGGING HIM TO THE LAST JOURNEY WITH SOME OF HIS CLOSE AND DEAR PALS FROM HIS PLACE.

BEING MY BROTHER IN LAW WE CANNOT CONSOLVE MY SISTER AS HIS ABSENT.

MOREOVER HIS FAMILY MEMBER (SON'S) MAY TAKEN OVER HIS THE VACANT PLACE TO FULFILL HIS MENTALITY AND HIS WISHES.

IN HIS BELOVED KARAMBAKUDI THE LOVING PEOPLE WHO WILLING TO ERRECT A MONEMENT FOR HIM TO SHOW THEIR GRATITUDE.

MAY THE ALIMIGHTY WISH TO BE WITH US AND GIVE US BLESSING.

RAJ.THIRUVENGADAM,
PUDUKKOTTAI.
KATHAKURUCHI.



OFF. 22389
22063
PER. 25300
RES. 21506

# The Pudukkottai District Central Co-operative Bank Ltd.,

PUDUKKOTTAI-622 001.

V. KARUPPIAH, B. COM., HDC.,
GENERAL MANAGER.


Date 27...12..1999.



புதுக்கோட்டை மாமன்னர் குடும்பத்தில் பிறந்த சாதாரண மக்களோடு ஒன்றி வாழ்ந்த பெருமகனார் திரு. துரை. விஜய ரெகுநாத பல்லவராயர் அவர்களுக்கு மணி மண்டபம் அமைத்த அவரது புகழ்பரப்பிட எடுத்துக் கொண்ட முயற்சிக்கு விழாக் குழுவினருக்கு எனது அன்பு வணக்கங்கள்.

"புதுக்கோட்டை பகுதியில் அனைத்து தரப்பினராலும், அனைத்து கட்சியினராலும் அன்புடன் கொண்டாடப்பட்டவர். கடைசி நிமிடம் வரை மாவட்ட மக்களின் நலனுக்காக போராடியவர், கறம்பக்குடி தனி தாலுக்கா ஆக வேண்டுமென தீராத ஆசை கொண்டவர். அன்னாரின் கடைசி ஆசை நிறைவேறிடவும் விழா மலர் சிறக்கவும் எனது அன்பு நிறை நல்வாழ்த்துக்கள்.".

அன்புடன்,

[signature]

(வி. கருப்பையா)

- - - - - - - - - - - - - - - - - - - - - - - -



எல். நடராஜன், பி.காம்., (ஆனர்ஸ்.),
செயலாளர், (ஓய்வு)
புதுக்கோட்டை மாவட்ட மத்திய
கூட்டுறவு வங்கி,
புதுக்கோட்டை

நாள்: 20.12.99

அன்பார்ந்த அய்யா,

திரு. அரை. விஜயரெகுநாத பல்லவராயர் நினைவு ஆலயம் கட்டப்பட்டு, அவரது முழு உருவச்சிலை அமைத்து, அவரது நினைவு போற்றும் வகையில் நினைவு மலர் வெளியிடவிருப்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

அன்னாருடன், 1964ம் வருட முதல் நெருக்கமாக பழகும் வாய்ப்பை பெற்றேன். கறம்பக்குடி ஊராட்சி ஒன்றியத்தில் செயல்படும் கூட்டுறவுச சங்கங்களில் கடன் வசூலில், எங்கள் வங்கிக்குப் பெரிதும் உறுதுணையாகச் செயல்பட்டார். நாங்கள் அவரின் உதவிக்கு எப்போதும் அணுகினாலும் சிரித்த முகத்துடன் உதவி செய்து கூட்டுறவுச் சங்கத்தின் வளர்ச்சிக்கு பெரிதும் பாடுபட்ட உத்தமர்; கூட்டுறவாளர். நாணயத்தில் சிறந்தவர். எல்லோரிடமும் அன்பாக பழகக் கூடிய பண்பாளர். குறிப்பாக கறம்பக்குடி, அம்புகோவில் கூட்டுறவுச் சங்கங்களை நல்லவிதமாக வளர்ச்சியடைய உதவிய பெருந்தகையாளர். எங்களுக்கெல்லாம் பல யோசனைகள் கூறி புகழ் பெற்றவர். அன்னாரின் அகால மரணம் எங்களைப் பெரிதும் அதிர்ச்சியடைய செய்தது.

அன்னார் விட்டுச் சென்ற பணிகளை, அவரது நினைவு ஆலயம் மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டி, வழிகாட்டியாக அமையும் எனவும், அவர் புகழ் பரப்ப தாங்கள் எடுத்துக்கொண்ட அனைத்து முயற்சிகளும் வெற்றியடைய, கூட்டுறவாளன் என்ற முறையில் வாழ்த்துக்கிறேன்.

தங்களன்புள்ள,

(எல். நடராஜன்)



பேரறிஞர் அண்ணாவுடன்
வெட்டன் விடுதி உயர் நிலைப் பள்ளித் திறப்பு விழாவில்
பல்லவராயர் 23–07–1967



பெருந்தலைவர் காமராஜருடன்
பெருந்தலைவர் பல்லவராயர் அவர்கள்



ஆசிரியர் கடலில் பெருந் தலைவர் பல்லவராயர் 15–4–92 (மழையூர்)



கரம்பக்குடி அல்பத்திரிய்யா அரபிக் கல்லூரியில்
மனிதநேய மாண்பாளர் விருது



புது டெல்லியில் நடந்த ஒன்றியத்திற்கான
மாநாட்டில் பல்லவராயர்



புதுக்கோட்டை மன்னர் ராஜராஜ கோபாலத் தொண்ட
மானுடன் நீதியரசர் பல்லவராயர்



மணக்கோலத்தில் மனித நேய மாண்பாளர்



மனைவி, குழந்தைகளுடன் பல்லவராயர்





புதுக்கோட்டை இளைய மன்னருடன் பல்லவராயர்



புதுக்கோட்டை சப்கலெக்டர் திரு. நரசிம்மன் I.A.S. அவர்களிடம்
சிறந்த யூனியனுக்கான விருது பெரும் பல்லவராயர் – 1975



பிறந்த மண் பிலாவிடுதியில் துயில் கொள்ளும் பல்லவராயர்

# இதயம் நிறைந்த நன்றி



திருவளர்ந்தோங்கும், தீந்தமிழ் மக்களிடையே தென்றல் உலாவரும், கழனிகள் நிறைந்தோங்கும் கரும்பும் செந்நெல்லும் உயரும், கவின் மிகு கரம்பக்குடி நகர் இன்று *-2-2000* ல், கற்பகச் சோலையாய் திகழ்கின்றது; இன்று போல் என்றும் திகழும்..

அன்புள்ளம் கொண்ட சான்றோர்களும் ஆன்றோர்களும், அனைத்து இன, சமய மற்றும் அரசியல் இயக்கத்தைச் சார்ந்தவர்களும் அரசு ஊழியர்களும், ஆசிரியர்களும் அனைவரும் ஒன்றிணைந்து விழா நடத்துகிறீர்கள். என் தந்தை விஜய ரெகுநாத பல்லவராயர், அவர்கள் மீது தாங்கள் கொண்ட பற்றின் காரணமாக, பாசத்தின் அடையாளமாக மணிமண்டபம், திருவுருவச்சிலை, நூலகம், அறக்கட்டளை, மலர் வெளியீடு என முதலாம் ஆண்டு நினைவு நாளன்றே விழா அமைத்து நடத்துவது துதியும் போற்றத்தக்கதாகும்.

எங்கள் இல்லத்திலிருந்து சென்னை சென்றவர்; சிலையாக நிற்கின்றார். இதயங்களில் வாழுகின்றார். அந்தத் துயரிலிருந்து மீள முடியவில்லை இருப்பினும் இனிய உள்ளங்களின் கூட்டு முயற்சியால்விழா சிறக்க, எனது தந்தையாரை வணங்குகிறேன்.

தமிழக முதல்வர், தமிழர்களின் தன்னேரில்லாத் தலைவர், குறளோவியர், பூம்புகார் நாயகர், ஐந்தமிழறிஞர் டாக்டர் கலைஞர் அவர்களின் திருக்கரத்தால் ஐம்பெரும் நிகழ்வுகள் துவக்கப் பெறுவது, தமிழே வந்து வாழ்த்துவதாகும்.

தமிழே ! தமிழின் அமுதமே ! எங்கள் உயிரில் கலந்த நாயக, முதல்வரே – உமக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

அகில இந்திய தொழிற்சங்க தலைவரும், எங்கள் இயக்கத்தின் நிறுவன தலை அமரர் பாரதப் பிரதமர் ராஜிவ் காந்தியின் பேரன்பிற்கு பாத்திரமான முன்னாள் ம அமைச்சர் பாசமிகு வாழப்பாடியார் அவர்கள், எனது தந்தையார் மருத்துவ மனை இருந்தபோது ஆறுதல் கூறினார்கள். மறைந்த பிறகு டெல்லியில் இருந்து எங்களோடு துக்கத்தில் பங்கு கொண்டார்கள். இன்று இவ்விழா சீரோடும் சிறப்ே நடைபெற தமிழக முதல்வரை அழைத்து வந்துள்ளார்கள் அன்னாருக்கு எனது நெ நிறைந்த நன்றி.

முன்னாள் தமிழக அமைச்சரும், நாடாளுமன்ற உறுப்பினரும், தமி தலைவர்களில் ஒருவருமான எஸ். திருநாவுக்கரசு அவர்கள், என் தந்தை மருத் மனையில் இருந்தபோது தைரியம் கூறினார்கள், மறைந்த பிறகு ஆறுதல் கூறினா மேலும் எங்கள் குடும்பத்தில் ஒருவராக திகழ்கின்றார்கள், அவர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றி.

ஒராண்டிற்குள் மணிமண்டபம் கட்டிட எல்லாவகையிலும் முயற்சி மிகநேர்த்தியாக பணியாற்றி கூட்டு முடிவாக செயல்கூட்டி, யாருடைய மன புண்படாவண்ணம், எல்லோருடைய இதயமும் மகிழ்ச்சியுறும் வண்ணம்,

"இதனை இவன் முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன் கண் விடல்"

என்ற குறள் நெறிப்படி திறம்பட செயல்பட்ட மணிமண்டப குழு சான்ே அனைவருக்கும் நெஞ்சம் நிறைந்த நன்றி.

கட்டுமானப் பணியில் பங்குபெற்று மிகச்சிறப்பாக நின்று நில வழிபாட்டுத்தலமாக, வரலாற்றுச் சின்னமாக அரும்பாடு பட்டு செயல் முடித்த கட் குழுவைச் சார்ந்த அனைத்து நெஞ்சங்களுக்கும் நன்றி.

கடந்த ஒராண்டு காலமாக சான்றோர்களை தருவித்து ஊர்தோறும், பள்ளிதோறும் என் தந்தையின் படத் திறப்பு விழா நடத்திய பெருமக்களுக்கும் என் இதய நன்றி.

கரம்பக்குடி பகுதியைச் சேர்ந்த கிராமப்புற மக்களும் மேலும் புதுக்கோட் மாவட்டத்தைச் சேர்ந்த கிராமப்புற மக்களும் காட்டிய அன்பும், பேருதவியு ஒத்துழைப்பும் என் நெஞ்சை நெகிழ வைக்கிறது. அவர்கள் எல்லோருக்கும் என் நெஞ் நிறைந்த நன்றி.

ஐம்பெரும் விழாவில் பங்கேற்ற அனைவருக்கும் ஊற்றெழுங்கண்ணீரை – ஆன கண்ணீரை, நெஞ்சம் நிறைந்த நன்றியை உங்களோடு கலந்து உறவாடி என் சார்பிலு என் குடும்பத்தின் சார்பிலும், சமர்ப்பிக்கின்றேன்.

என்றும் அன்புடன்,
விஜய. ரவி பல்லவராயர், B.Com.,



**சிவ. திருமேனிநாதன்** எம்.ஏ., எம். எட்.,
ஒருங்கிணைப்பாளர்
மணிமண்டபக் குழு, கரம்பக்குடி
(உதவிக் கல்வி அலுவலர் - முசிறி)ண

# நீதி தந்த நெஞ்சம்
# (அய்யாவின் வாழ்க்கை பாதை)

செல்வம் மட்டுமல்ல, செல்வாக்கும் பெற்ற குடும்பம் வீரம் நிறைந்த இ மட்டுமல்ல; விவேகம் நிறைந்த மண்ணில் ஆட்சிபுரிந்த மன்னர் குடும்பத் பிறந்தவரின் பிறப்பிடம் பிலாவிடுதி என்னும் வரலாற்று சிறப்புப் பெற்ற கிராம இப்பகுதி மக்களுக்கு அய்யா வீடு என அன்போடு அழைக்கப்பட்ட இல்ல புதுக்கோட்டை கடைசி மன்னரின் தாய் பிறந்த வீடு மட்டுமல்ல. அழியா பு பெற்ற அய்யா பல்லவராயர் பிறந்த வீடும் இதுவே.

நீண்ட நாட்களாக ஆண் பிள்ளை இல்லையே என்ற ஏக்கம். தமைக்கை இருவருக்குப்பின் பெற்றோர்கள் மகிழ்ந்திட உற்றார், ஊரார் குடும்பத்தின் வாரிசா துரைச்சாமி பல்லவராயருக்கும், ஜானகி அம்மையாருக்கும் மூன்றாவ குழந்தையாக பிறந்தார். ஊரே மகிழ்ச்சி கடல் தான்.

ஆம். அந்த நாள் 1931-ம் ஆண்டு டிசம்பர் திங்கள் 5-ம் நாள். இக்குழந்தைக் பெற்றோர் இட்ட பெயர் விஜயரெகுநாதன். பின்னாளில் பார் போற்ற வாழ் மாமனிதன் தான் பல்லவராயர். இன்று அவர் படமாக இருந்தாலும் மற்றவர்களுக் இவர் ஒரு பாடம்.

**இளமைக் கல்வி**

சின்னஞ்சிறு குழந்தை. சிவந்த முகம் மட்டுமல்ல. எப்போதும் சிரித்த முகம் அன்போடு வளர்த்தனர். இவருக்குப் பிறகு ஒரு தம்பியும், ஒரு தங்கையும் பிறந்தனர்.

பிலாவிடுதியில் வீட்டுக்கு அருகில் உள்ள பள்ளியில் ஒன்று முதல் மூன்றாம் வகுப்பு வரை கல்வி பயின்றார். பின்னர் 4-ம் வகுப்பு முதல் எட்டாம் வகுப்பு வரை கரம்பக்குடியில் பயின்றார். இவருடைய ஆசிரிய பெருமக்கள் பீம்ராவ், லெட்சுமணன் ராவ், கோ.கணேச அய்யர் ஆகியோர் சிறந்த கல்வியையும், விளையாட்டையும் கற்றுக் கொடுத்தனர். சுட்டியான நண்பர்களுடன், அமைதியான குணத்துடன் பள்ளியில் படித்தார்.

புதுக்கோட்டை ஸ்ரீபிரகதாம்பாள் உயர்நிலைப் பள்ளியில் உயர்நிலைப் பள்ளிக் கல்வியை பயில புதுக்கோட்டை சென்றார். மேல அரண்மனையில் இருந்தாலும், மன்னருக்கு தாய் மாமன் மகன் ஆனாலும், அப்போதே அனைத்து இன மாணவர்களிடம் அன்பாக பழகினார் என்பதை அவருடைய நண்பர்கள் இன்றும் கூறுவதை அறியலாம்.

### மன்னர் கல்லூரியில் படிப்பு

புகுமுக வகுப்பை புதுக்கோட்டை மன்னர் கல்லூரியில் சேர்ந்து பயின்ர். பின்னர் பி.ஏ. பட்ட வகுப்பில் 3 ஆண்டுகள் அதே கல்லூரியில் பயின்றார்.

கட்டான உடல், கவர்ச்சியான முகம். அனைவரும் விரும்பும் அமைதியான குணம். கல்லூரியில் படிக்கும்போதே சிறந்த மாணவனாகவும், விளையாட்டில் அதிக ஈடுபாடு கொண்டும் விளங்கினார். கல்லூரியில்நடைபெற்ற தடகள விளையாட்டுப் போட்டியில் முதல் இரண்டு ஆண்டில் தனி போட்டி நடைபெறும் இவருக்கும் இன்னொரு மாணவனும் கடும்போட்டி ஏற்படும் என அறிகிறார். 100 மீட்டரிலும், குண்டு எறிதலிலும் இருவரும் கலந்து கொள்ளும் நிலை ஏற்படுகிறது. எப்படி வெற்றி பெறுவது என எண்ணி கடும் முயற்சியில் ஈடுபடுகிறார். அந்த ஆண்டிலும் இவரே சாம்பியன் பட்டத்தை பெறுகிறார். புதுக்கோட்டை கல்லூரி வரலாற்றில் தொடர்ந்து மூன்று ஆண்டுகள் வெற்றி பெற்ற வீரர் என கல்லூரி பலகையில் எழுதப்பட்டுள்ளது கண்டு மகிழாத கல்லூரி மாணவர்களே கிடையாது என பெருமை பெற்றவர்.

ஒரு நாள் இந்த தொடர் வெற்றியின் ரகசியத்தை அவரே கூறினார். ''நான் அதிகாலை 4 மணிக்கு எழுந்து புதுக்குளத்துக்கு தனியாகவே செல்வேன். குளக்கரையில் கடுமையான ஓட்டப் பயிற்சி எடுப்பேன். 6 மணிக்கு அரண்மனைக்கு திரும்பி வருவேன். அரண்மனைக்குள் குண்டு அறிதல் பயிற்சி எடுத்துக் கொள்வேன். கடுமையான என் முயற்சி மற்ற மாணவர்களுக்கு தெரியாது'' என்றார். விடாமுயற்சி வெற்றியைத் தரும் என்பதற்கு எடுத்துக்காட்டானவர்.

### பல்கலைக்கழக கால்ப்பந்தாட்ட வீரர்

1953-54 ஆண்டில் தமிழகத்தில் சென்னை பல்கலைக்கழகம் ஒன்றே ஒன்றுதான் இருந்தது. அன்றைய காலத்தில் பல்கலைக்கழக கால் பந்தாட்ட அணிக்கு தென் தமிழகத்தில் தேர்வு செய்யப்பட்ட கால்பந்தாட்ட வீரர்கள் இருவர்தானாம். அந்த இருவரில் இவரும் ஒருவர். பல்கலைக்கழக அணியில் மிகச் சிறப்பாக ஆடி பின்கள ஆட்டக்காரர் என்ற சிறப்புப் பெயரை பெற்று அனைவராலும் பாராட்டப் பெற்றார்.

### அண்ணாவால் பாராட்டப்பட்டவர்

கல்லூரியில் படித்த நேரம். மாணவப்பருவம். தன் தாய்மாமன் தங்கமணி

அவர்கள் கரம்பக்குடி நகர தி.மு.க. செயலாளர். கரம்பக்குடியில் திராவிட முன்னேற்ற கழக பொதுக்கூட்டம் 1954-ம் ஆண்டில் ஏற்பாடு செய்கின்றனர். கூட்டத்திற்கு பேரறிஞர் அண்ணாவும், அன்பில் தர்மலிங்கமும் கூட்டத்திற்கு வருகின்றனர். கூட்டம் முடிந்ததும் அண்ணாவுக்கு இரவு உணவு பிலாவிடுதியில் அய்யா பல்லவராயர் அவர்கள் வீட்டில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மாணவப் பருவத்தில் தன் இல்லத்தில் பேரறிஞர் அண்ணாவை அன்போடு வரவேற்று உபசரித்து நல்ல உணவு அளித்து உபசரிப்பு செய்தார். அண்ணா அவர்கள் அந்த இளைஞரை அழைத்து ''தம்பி நல்ல உணவு தந்து உபசரித்தாய், நீ நன்றாக படித்து பட்டம் பெற்று அரசாங்கப் பணிக்குச் செல்லுங்கள். எக்காரணத்தைக் கொண்டும் அரசியலுக்கு வராதீர்கள்'' என்று பாராட்டிச் சென்றார்.

## கலைஞரின் அன்பைப் பெற்றவர்

1962-ல் ஆலங்குடி சட்டமன்ற உறுப்பினராக தேர்வு பெற்ற தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர் திரு. முருகையன் அவர்களுக்கு திருமணம் டாக்டர் கலைஞர் அவர்கள் தலைமையில் பிலாவிடுதியில் நடைபெற்றது.

திருமணம் முடிந்ததும் கலைஞர் அவர்களுக்கு மதிய உணவு அய்யா பல்லவராயர் அவர்கள் இல்லத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அய்யா பல்லவராயர் அவர்கள் பேரறிஞர் அண்ணாவை உபசரித்ததைப் போலவே அன்போடு கலைஞர் அவர்களையும் தன் இல்லத்தில் வரவேற்று உபசரித்து உணவு அளித்து மகிழ்ந்தார். அண்ணாவின் அறிவுரையையும், கலைஞரின் அன்பையும் பெற்ற பெருமை பெற்றவர்.

## தென்னக இளைஞர் கால்பந்துக் கழகம் துவக்கம்:

கல்லூரி படிப்பை முடித்ததும் கரம்பக்குடியில் தன்னுடைய விளையாட்டு சக நண்பர்களுடன் ஒரு கால்பந்து கழகத்தை நிறுவினார். மாணவப் பருவத்தில் அண்ணாவால் ஈர்க்கப்பட்டவர். அதனால் கால்பந்து கழகத்திற்கு தென்னக இளைஞர் கால்பந்து கழகம் என பெயரிட்டார்.

## பொங்கல் விழா

விளையாட்டுக் கழகத்தின் சார்பில் தமிழர் திருநாளை இலக்கிய விழாவாகவும், விளையாட்டு விழாவாகவும் நடத்த வேண்டும் என்று நண்பர்களுடன் கலந்துபேசி முடிவெடுத்தார். நண்பர்கள் பல ஊர்களில் நன்கொடை பெற்று கரம்பக்குடியில் முதன் முதலில் பொங்கல் விழாவை துவக்கினார்.

புதுக்கோட்டை மன்னர் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த மாணவி தமிழரசி என்னும் கல்லூரி மாணவியை பொங்கல் விழாவில் இலக்கிய பேச்சாளராக அறிமுகப்படுத்தி பேச வைத்தார். அந்த பெண்ணின் கன்னிப்பேச்சும், முதல் மேடை பேச்சும் அதுதான். அய்யா அவர்களால் மேடையில் ஏற்றி பேசவைத்த அந்த மாணவி பிற்காலத்தில் திராவிட முன்னேற்ற கழக தலைமைக் கழக பேச்சாளராக உயர்ந்தார். சட்டமன்ற மேலவை உறுப்பினராகவும் இருந்தார்.

அந்த ஆண்டில் துவங்கிய தமிழர் விழாவாக ஆரம்பித்து பிற்காலத்தில் தமிழ் அறிஞர் பலரை அழைத்து பட்டிமன்றம், இலக்கிய கூட்டங்கள் எல்லாம் ஆண்டுதோறும் பொங்கல் திருநாளை சிறப்பாக நடத்தி பெருமை பெற்றவர்.

அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன் பழிப்பதில்லாயின் நன்று

1961-ம் ஆண்டு திருமணம். தன் அத்தை மகன் கத்தக்குறிச்சி அய்யா வீடு என்ற புகழ்பெற்ற குடும்பம். புதுக்கோட்டை மன்னருக்கும் சிறிய தாயார் இல்லமும் கூட. அந்த இல்லத்தில் தன் அத்தையின் பேத்தியை திருமணம் செய்ய பேசி முடிக்கப்பட்டது. 1961-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 14-ம் நாள் அய்யா அவர்களுக்கும் மதுராம்பாள் இராஜாயியார் அவர்களுக்கும் புதுக்கோட்டை மாமன்னர் அவர்கள் திருக்கரத்தால் மாங்கல்யத்தை எடுத்துக் கொடுத்து புதுக்கோட்டை அரண்மனையில் திருமணத்தை நடத்தி வைத்தார். உற்றார் மகிழ்ந்திட ஊரார் வாழ்த்திட வரலாற்று நாயகனின் இல்லற வாழ்க்கை ஆரம்பம், வரலாற்று நிகழ்ச்சியாகும்.

## பிலாவிடுதி அய்யா

மன்னருக்கு மாமன் வீடு. மன்னர் குடும்பத்தை சேர்ந்தவர் இப்பகுதி மக்களால் அன்போடு அனைவரும் பிலாவிடுதி அய்யா வீடு என்றுதான் அழைப்பார்கள்.

1965-ம் ஆண்டு கரம்பக்குடியில் ஊராட்சி ஒன்றிய தலைவர் தேர்தல் நடைபெறும் காலம். இப்பகுதியில் உள்ள அனைத்து தரப்பினரும் இவரிடத்தில் வந்து தாங்கள் பெருந்தலைவராக வரவேண்டும் என விரும்பி கேட்கின்றனர். இவரோ அரசியலில் அனுபவம் இல்லாத இளைஞர். தேசிய பற்றுக் கொண்டவர். தன் அத்தை மகனும் புதுக்கோட்டை இளைய மன்னருமான விஜயரெகுநாத தொண்டைமான் அவர்கள் காங்கிரசில் சேர்ந்த நேரம். இவரும் அவருடன் தேசிய இயக்கத்தில் சேர்ந்தார்.

நண்பர்கள் அனைவரின் வற்புறுத்தலுக்குப் பிறகு இவருடைய சம்மதத்தை பெற்றனர். பிலாவிடுதியில் முதன் முதலாக ஏகமனதாக ஊராட்சி மன்ற தலைவராக தேர்வு செய்யப்படுகிறார்.

பெருந்தலைவர் தேர்தலில் கலந்துகொள்கிறார். தேர்தல் அனுபவம் நிறை நண்பர்கள் சக்கரபாணி அவர்களும், நெய்வேலி மணியக்காரர் மருதப மண்ணவேளார் அவர்களும், காட்டாத்தி பெரியவர் ராமசாமி கவிராயர் அவர்கள இரவு பகலாக வேலை செய்கிறார்கள். அன்றைய நாளில் தி.மு.க. ஊராட்சி மன்ற தலைவர்கள் ஓட்டை யார் பெறுகிறார்களோ அவர்தான் வெற்றிபெற முடிய என்றநிலை. கரம்பக்குடி தி.மு.க. பொறுப்பாளர்கள் மற்றும் ஊராட்சி தலைவர்கள் சென்னை செல்கின்றனர். கலைஞர் அவர்களிடத்தில் கரம்பக்கு ஒன்றிய தேர்தல் சம்பந்தமாக பேசி அய்யா பல்லவராயர் அவர்களை ஆதரிப்ப என கலைஞரிடம் அனுமதி பெற்று திரும்புகின்றனர்; இம்முயற்சியில் அண்ண சக்கரபாணி பெரும் பணியாற்றினார். 30.04.65-ல் நடைபெற்ற தேர்தலில் வெற் பெற்று பெருந்தலைவராக பொறுப்பு ஏற்கிறார். அய்யா பல்லவராயர் அவர்கள அண்ணன் சக்கரபாணியிடம் அளவு கடந்த அன்பும், பாசமும் வைத்திருந்தார்.

சக்கரபாணி அவர்கள் வாழ்க்கையில் தனக்கென வாழாத பொது நலத்தொண்டர். அவர் குடும்பத்திற்கு ஏதாவது உதவிகள் செய்திட வேண்டு என்று அடிக்கடி கூறுவார். அந்த சிந்தனையில்தான் பிறகு எம்.ஜி.ஆர். அவர்களை வரவழைத்து சக்கரபாணி அவர்களுக்கு நிதி அளித்திட நண்பர்களோடு ஏற்பாடு செய்தார்.

**பிறருக்கு உதவிடும் சீரிய பண்பாளர்**

## 1967-ல் அண்ணாவும் பல்லவராயரும்

1965-ல் பெருந்தலைவராக வெற்றி பெற்றார். 1966-ம் ஆண்டு தன் ஒன்றியத்தில் உயர்நிலைப் பள்ளிகள் 3 இடங்களில் ஆரம்பிக்க பெரும் முயற்சி செய்கிறார். ஆனால் மழையூர் மற்றும் ரெகுநாதபுரத்திற்கு அனுமதி கிடைத்து உயர்நிலைப் பள்ளிகளை துவக்கினார். வெட்டன் விடுதி கிடைக்கவில்லை. நிர்வாக சிக்கலால் கிடைக்கவில்லை என அறிந்து வருந்தினார். 1967-ல் அறிஞர் அண்ணா தலைமையில் தமிழகத்தில் ஆட்சி ஏற்படுகிறது.

பல்லவராயரின் நண்பரும், ஆலங்குடி சட்டமன்ற உறுப்பினருமாகிய கே.வி. சுப்பையா அவர்களுடன் வெட்டன்விடுதி ஊராட்சி மன்ற தலைவர் சொக்கவெட்டர் அவர்களும், சென்னை சென்று முதலமைச்சர் அண்ணாவைப் பார்த்து வெட்டன்விடுதிக்கு உயர்நிலைப் பள்ளி தேவை என்றும் கூறுகிறார்.

உயர்நிலைப் பள்ளிக்கு அனுமதி கிடைத்ததும் பள்ளி துவக்கவிழா முதலமைச்சர் தலைமையில் தான் நடத்திட வேண்டும் என முடிவு செய்கிறார். பேரறிஞர் அண்ணா முதலமைச்சர் பொறுப்பேற்ற பிறகு இப்பகுதியில் கலந்துகொள்ளும் முதல் நிகழ்ச்சி. விழாவிற்கு ஒன்றிய பெருந்தலைவர் பல்லவராயர் தலைமை ஏற்க முதலமைச்சர் பேரறிஞர் அண்ணா பள்ளியை துவக்கி வைத்து உரையாற்றுகிறார்.

நிகழ்ச்சி முடிந்து மதிய உணவுக்கு சட்டமன்ற உறுப்பினர் இல்லம் கரும்பிரான் வீட்டுக்கு அண்ணா செல்கிறார். அய்யா பல்லவராயர் அவர்கள் கரம்பக்குடி திரும்புகிறார்.

சட்டமன்ற உறுப்பினர் கே.வி.சுப்பையா அவர்களிடம் அண்ணா கேட்கிறார். ஆண்டுகளுக்கு முன்பு இப்பகுதிக்கு வந்தபோது கல்லூரியில் படித்த இளைஞர் உணவகத்தில் உணவு அருந்தினோமே அந்த பையன்கள் இப்போது என்ன செய்கிறார்கள் என்று கேட்க, சட்டமன்ற உறுப்பினர் அந்த இளைஞன்தான் இன்று இன்றைய விழாவில் தலைமை ஏற்றிருந்த ஒன்றிய பெருந்தலைவர் விஜயரெகுநாதன பல்லவராயர் என கூறினார். அண்ணா உடனே அவரிடம் கோபித்துக் கொண்டு உடனே அவரை அழைத்துவா பிறகுதான் சாப்பிடுவேன் என்றார். இந்த இனிய நிகழ்ச்சியை அய்யா அவர்கள் அண்ணாவைப் பற்றி பேசும்போதெல்லாம் நினைவுகூறி பாராட்டி பெருமை கொள்வார்.

**திருச்சி மாவட்டத்தில் சிறந்த ஒன்றியம்**

ஒன்றிய பெருந்தலைவராக இருந்த காலத்தில் திட்டங்களை நிறைவேற்றுவதிலும் சிறந்த நிர்வாகத்திற்காகவும் இரண்டு ஆண்டுகள் முதல் பரிசினை பெற்றவர்.

நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வை
நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நன்னெறிகள்

பாரதியின் பாட்டுக்கு ஏற்ற ராஜநடையும், பார்வையும் கொண்ட நீதிமான். ஏழைகளுக்கு நீதியின் காவலர். காவல் நிலையம், வழக்கு மன்றம் செல்ல இயலாத ஏழைகளுக்கு இவர்தான் நீதி அரசர்.

மன்னர்களிலே சிலர்தான் மனிதர்கள்
மனிதர்களிலே சிலர்தான் மன்னர்கள்

எத்தனையோ மன்னர்கள் ஆட்சி செய்துள்ளார்கள். பலர் மன்னராக ஆட்சி செலுத்தினாலும் சிலர்தான் மனித நேயத்தோடு ஆட்சி செய்தவர்கள். மனிதர்களாக வாழ்ந்து காட்டியவர்களில் அசோகர் போன்றவர்கள் இப்பூமியில் கோடிக் கணக்கில் மனிதர்கள் பிறந்தார்கள். வாழ்ந்தார்கள். மறைந்தார்கள். அவர்களில் ஒரு சிலர்தான் பட்டம், பதவி ஏதும் இல்லாமல் அழியா புகழ்பெற்று மக்கள் மனதில் நிலையான இடத்தைப் பெற்று மனிதர்களில் மன்னராக வாழ்ந்தவர்கள். இந்த வரிசையில்தான் மகாத்மா காந்தி, பெரியார், அன்னை தெரசா போன்றவர்கள் இவர்களைப் போலவே மனித நேய மாண்பாளராக சமநீதி வழங்கும் முடிசூடா மன்னராகவும், அனைவராலும் பாராட்டப்பட்டார். எனவேதான் இவர் மனிதர்களிலே மன்னவராவார்.

## மனிதநேய மாண்பாளர்

தமிழகத்தில் பல பகுதியிலிருந்து பேறறிஞர்கள் கரம்பக்குடி அரபிக் கல்லூ வெள்ளி விழா மாநாட்டில் பங்கேற்றனர். அந்த மாநாட்டில் அய்யா பல்லவராய அவர்களுக்கு மனிதநேய மாண்பாளர் என்னும் படத்தை அளித்து கௌரவித்தன அன்று முதல் சமூக நீதி காவலர், கல்விக்காவலர், மனிதநேய மாண்பாளர் என அழைக்கப்பட்டார்.

## இறைத் தொண்டு

சமூகத் தொண்டுடன் இறைத் தொண்டும் சேர்ந்து செய்தார்கள். அய்யாவின் குடும்பம் இப்பகுதியில் பிலாவிடுமி, முள்ளங்குறிச்சி, செவ்வாய்பட்டி, காட்டாத்தி, கரம்பக்குடி ஆகிய ஐந்து கிராமங்களில் உள்ள ஸ்ரீமாரியம்மன் கோவில்களுக்கு திருவிழாவில் பங்குகொள்ளும் பொறுப்பு உண்டு. எந்த பிரச்சனை எழுந்தாலும் அய்யா அவர்கள் தலையிட்டு அமைதிப்படுத்தி ஒற்றுமைப்படுத்தி திருவிழாவை நடத்துவார்.

ஒருமுறை முள்ளங்குறிச்சி ஸ்ரீமாரியம்மன் கோவில் திருவிழா பல ஆண்டுகள் தடைப்பட்ட பிறகு அய்யாவின் முயற்சியால் கோவில் குடமுழுக்கு திருப்பணிகள் மேற்கொண்டார். பணிகள் முடிந்து கும்பாபிசேகம் செய்ய நாள் குறிக்கப்பட்டது. கிராம மக்கள் அனைவரும் விழாவிற்கு யாரை அழைத்து கும்பாபிசேகம் செய்வது என்று கேட்டபோது பலர் குன்றக்குடி அடிகளாரையும், சங்கராச்சாரியார் போன்றவர்களை அழைக்க வேண்டும் என்று கூறினார்.

அய்யா அவர்களோ நீங்கள் கூறும் சான்றோர்களைவிட ஒரு பெரிய மனிதர் வருகிறார். விழாவுக்கு ஏற்பாடு செய்யுங்கள் என கூறிச் சென்றார்.

விழா அன்று பெரும்திரளான கூட்டம் அய்யா வரவை எதிர்நோக்கி உள்ளனர். ஆனால் அய்யா மாவட்ட ஆட்சித் தலைவர் திரு.செல்வம் அவர்களை அழைத்து வந்தார். கோவில் மேலே இருவரும் ஏறி குடத்தை ஆட்சித் தலைவர் அவர்கள் கையில் கொடுத்து மந்திரங்கள் ஓத கும்பத்தில் குடத்து நீரை ஊற்றச் சொன்னார் பலரும் பாராட்டினர்.

இந்த நிகழ்ச்சி அய்யா வாழ்க்கையில் ஒரு சிறப்பான நிகழ்ச்சி மட்டுமல்ல. புரட்சியும் கூட எனலாம். காரணம் ஆட்சித் தலைவர் அவர்கள் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர் என்பதாகும்.

## ஆசிரியர்களிடத்தில் அன்பு பாராட்டல்

அய்யா அவர்கள் பெருந்தலைவராக பொறுப்பு ஏற்றிருந்தபோது ஆசிரியர்களிடம் மிகுந்த அன்பு கொண்டிருந்தார். பல புதிய துவக்கப் பள்ளிகளைத் திறந்தார். ஆசிரியர்கள் நியமனம் நேர்மையாகவும், ஆசிரியர்கள் மாறுதல்

ஆசிரியர்களின் ஒவ்வொருவரின் நிலை அறிந்து யாருடைய சிபாரிசும் இல்லாமல் முன்னுரிமை அடிப்படையில் செய்து கொடுத்தார். ஆசிரியர்களின் நெஞ்சங்களில் நிறைந்தவர்.

### பெண்கள் உயர்நிலைப் பள்ளி அமைத்தல்

கரம்பக்குடியில் பெண்களுக்கு என தனியாக ஒரு உயர்நிலைப் பள்ளி தேவை என ஊர் மக்கள் விரும்பியபோது பொதுமக்களிடத்தில் நேரில் சென்று பள்ளிக்கு நன்கொடை வசூல் செய்து பணத்தை அரசுக்கு செலுத்தி பெண்கள் உயர்நிலைப் பள்ளியை துவக்கினார். எந்த நன்கொடையும் வாங்க வெளியில் செல்லாத அய்யா அவர்கள் பெண்கள் பள்ளிக்காக எல்லோர் இல்லத்திற்கும் சென்றார். பிறகு பள்ளிக்கு இடம் தேவை என கூறியபோது அய்யா சொன்னார் ''ஒரு மனிதர் உள்ளார் வாருங்கள் சென்று இடம் கேட்போம்'' என்று கூறினார். திண்டுக்கல்லுக்கு அழைத்துச் சென்றார். அப்போதுதான் எங்களுக்கு தெரியும் அவரும் கரம்பக்குடியைச் சேர்ந்தவர்தான் என்று. அய்யா அவரிடம் பள்ளிக்கு இடம் கேட்டார். அவருடைய வாழ்க்கையிலே யாரிடத்திலும் ஏதும் கேட்டு பழக்கம் இல்லாத குணம் உடையவர். தட்டாமல் அவரும் தந்தார் பள்ளிக்கு அவர் இடத்தை தானமாக பெற்றது பெருமகிழ்ச்சி அனைவருக்கும். அன்று அந்த இடத்தின் மதிப்பு 3 லட்சம் ரூபாய், மகிழ்வோடு திரும்பினோம்.

### பொது வாழ்க்கையில் துணைவியாருடன்

பெண்கள் பள்ளிக்கு இடம் தந்த அந்த பெரியவருக்கு கரம்பக்குடியில் பாராட்டு விழா ஏற்பாடு செய்தார். விழாவன்று பெரியவர் நவனீதம் செட்டியார் குடும்பத்துடன் புதுகை வருகிறார். துன்பமான செய்தி விழா சிலரால் ரத்து செய்யப்படுகிறது. இடம் தந்த அந்த வள்ளளை பாராட்ட முடியவில்லையே என மன வேதனையுடன் அவரை புதுக்கோட்டையிலிருந்து திரும்பி அனுப்புகிறார் அன்று அய்யா பட்ட வேதனைக்கு அளவே இல்லை.

மீண்டும் அடுத்த ஆண்டு பெரும் முயற்சியினால் அன்றைய அமைச்சர் திரு. எஸ்.ரகுபதி அவர்களை அழைத்து பெரியவர் நவனீதம் செட்டியார் தம்பதிகளுக்க பொன்னாடை போர்த்தி பாராட்டி சிறப்பிக்கிறார். அந்த விழா மேடைதான் அய்யா பல்லவராயர் அவர்கள் பேசும்போது முதன் முதலாக பொது நிகழ்ச்சியில் தனது துணைவியாருடன் கலந்து கொண்ட முதல் நிகழ்ச்சி ஆகும் என்றார்.

பொது வாழ்க்கையில் தியாக உணர்வும், தேசப்பற்றும் எப்போதும் அவரிடம் காணப்படும் பண்புகளாகும். தன்னுடைய 34-ம் வயதில் பொது வாழ்க்கையில் ஒன்றிய பெருந்தலைவராக பொறுப்பேற்றது முதன் தன் இறுதி வாழ்நாள் வரையில் சமுதாய நலனில் அக்கறை காட்டினார்.

### தனியாத ஆசைகள்

இப்பகுதி முன்னேற்றத்தில் அக்கறை கொண்டவர் தன் எண்ணங்களில் ஆண்டுக்கணக்கில் இருந்தவை கரம்பக்குடி விவசாயிகளின் நன்மை கருதி அக்னி ஆறு அணைக்கட்டு திட்டம் மான்யவயல் அருகில் கட்ட வேண்டும் என்பது பலவித முயற்சியை மேற்கொண்டு கடந்த 25 ஆண்டுகளின் முயற்சியால் இந்த அணை கட்டிமுடிக்கப்பட்டது. புதுக்கோட்டை மாவட்ட மக்களின் நலனைக் கருதி, கொள்ளிடம் ஆற்றில் மழைக்காலங்களில் வீணாக சென்று கடலில் கலக்கும் காவிரி உபரி நீரை குளித்தலை அருகில் பிரித்து புதுக்கோட்டைக்கு கொண்டு வரும் திட்டத்திற்கு அய்யா பல்லவராயர் அவர்களை தலைவராகக் கொண்டு மாவட்ட விவசாயிகள் குழு கே.ஆர். சுப்பையா, ஜி.முத்தையா தலைமையில் மாவட்டம் முழுவதும் சுற்றுப்பயணம் செய்து அதன் பயனை அனைவரும் அறியச் செய்தார். நாடாளுமன்ற உறுப்பினர்களிடம் கூறி! நிறைவேற்றித்தர பெருமுயற்சி எடுத்தார். திட்டம் அரசின் பரிசீலனைக்கு கொண்டு சென்றார்.

பல ஆண்டுகளாக கரம்பக்குடியை தாலுகா ஆக்கும் கோரிக்கையை தொடர்ந்து வலியுறுத்தி வந்துள்ளார். இக்கோரிக்கைக்காக கரம்பக்குடியில் உள்ள அனைத்துக் கட்சியினரையும் ஒன்று சேர்த்து உண்ணாவிரதம் இருந்தார். பிறகு சென்னைக்கு தமிழக முதல்வர் கலைஞரிடம் சென்று பேசிட பெருமுயற்சி எடுத்தார்.

தனக்காக வாழாதவர். கரம்பக்குடியில் அனைத்து மக்களின் பிரச்சனைகளை தீர்த்திடும் பண்பாளர்.

### தேச பக்தி

தேசிய உயர்வு கொண்டவர், மகாத்மா காந்தி, இந்திராகாந்தி, ராஜீவ்காந்தி ஆகியோர்கள் நாட்டிற்காக இரத்தம் சிந்திய தேசத் தலைவர்கள் மீது பற்று கொண்டவர். தலைவர் காமராஜரிடம் மிகுந்த பற்றும் பாசமும் கொண்டவர். காமராஜர் இறந்த செய்திகேட்டு இரண்டு நாள் துக்கம் தாளாமலும், உணவு அருந்தாமலும் வருந்திக் கொண்டவர்.

### ராஜீவ் காங்கிரசுடன் இணைவு

காங்கிரஸ் மீது பற்றக் கொண்டதால் காமராஜருக்குப் பிறகு தலைவர் வாழப்பாடியார் அவர்கள் தலைமையில் காங்கிரஸ் கட்சியிலும் பின்னர் அவர் ஆரம்பித்த தமிழக ராஜீவ் காங்கிரசிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர். மாநில துணைத் தலைவராகவும் இருந்தார். வாழப்பாடியாரின் நம்பிக்கைக்கும் பாசத்திற்கும் உரியவராக கடைசிவரை இருந்தார்.

தேசிய நாட்களை சிறப்பாகக் கொண்டாடுபவர். 11 ஆண்டுகள் பெருந் தலைவராக இருந்த காலத்தில் ஜனவரி 26 குடியரசு தின விழாவை மிகப் பெரிய இலக்கிய சொற்பொழிவாளர்களைக் கொண்டு நடத்தியவர்.

## சுதந்திர தின பொன்விழா நிறைவு விழா

[illegible]-ம் ஆண்டு சுதந்திர தின பொன்விழாவை கரம்பக்குடி மேல்நிலைப் பள்ளியில் கொண்டாடினார். அன்று தியாகிகளை கவுரவித்தார்.

[illegible]-ம் ஆண்டு ஜனவரி 25-ம் நாள் கல்விக்காவலர் பூண்டி அய்யா அவர்கள் அவர் இறப்பு நிகழ்ச்சியில் கலந்து கொண்டு பூண்டி அய்யாவிடம் துக்கம் தெரிவித்தார்.

ஜனவரி 26 குடியரசு தினம் ஆண்டுதோறும் கரம்பக்குடி பள்ளிக் கூடத்தில் தேசியக் கொடி ஏற்றி உரையாற்றுவது அவரது வழக்கம். இந்த ஆண்டு சுப்பராமையர் பள்ளியில் தன்னுடைய நண்பர்கள் ராமையா (ஒய்வு பெற்ற கல்வித்துறை துணைத் தலைவர்) கோபாலகிருஷ்ணன் (ஒய்வு பெற்ற தலைமை ஆசிரியர்) இவர்களுடன் சுப்பராமையர் பள்ளியில் கலந்து கொண்டு தேசியக் கொடியை ஏற்றி வைத்தார்.

ஜனவரி 27 புதுக்கோட்டையில் புதுமனை புகுவிழாவில் கலந்து கொள்கிறார். அன்றைய தினம் தன் ஆருயிர் நண்பர் சிவ.கருப்பையா (ஒய்வு பெற்ற ஆணையர்) அவர்களை சந்தித்து நலம் விசாரித்து வருகிறார். தமிழக முதல்வரை சந்தித்து கரம்பக்குடி தாலுகா பற்றி பேசிட சர்வகட்சி தலைவர்களுடன் இரவு சென்னை செல்ல முடிவு எடுத்திருந்தனர். இவருக்கு பேருந்தில் டிக்கெட் எடுக்கப்பட்டிருந்தது. கரம்பக்குடியிலிருந்து நண்பர்கள் அனைவரையும் அழைத்துச் செல்ல வேண்டும் என்ற ஆசையினால் தனது பேருந்து டிக்கெட்டை ரத்து செய்கிறார். ஒரு காரில் நண்பர்களுடன் இரவு 11 மணிக்கு புதுக்கோட்டையிலிருந்து சென்னைக்கு புறப்படுகிறார்.

## விண்ணகம் செல்ல விண்ணப்பம்

28.02.99 அதிகாலை 2 மணிக்கு உளுந்தூர்பேட்டை அருகில் இவர்கள் கார்மீது லாரி மோதி விபத்துக்குள்ளனார்கள். 3 மணிக்கு தொலைபேசி செய்தி வருகிறது. உடன் திருச்சி செல்கிறோம் மீள முடியாத அதிர்ச்சி. அய்யா கூறுகிறார் "நான் தூங்கிவிட்டேன் அடிபட்டுவிட்டது கை கால்கள் உணர்வில்லை" என்கிறார்.

மருத்துவமனையில் தீவிர சிகிச்சை செய்யப்பட்டது. தண்டுவடத்தில் அறுவை சிகிச்சைக்குப்பின் உடல் நலம் தேறிவருகிறார்.

## காலனின் வெற்றி

அந்த நாள் எங்களுக்கு துன்ப நாள் என தெரியாது. 11.02.99-ம் நாள் வாழ்க்கையின் கொடிய நாள். நானும் நண்பர் கோவிந்தன் அவர்களும் அய்யாவுக்கு காலை மருந்தும் பாலும் கொடுக்கிறோம் அருந்தினார் 7.30 மணிக்கு அய்யாவின் துணைவியாரை அழைக்கிறார். தண்ணீர் கேட்கிறார். எப்போதும் தன் துணைவியார்

மீது மரியாதையும், பாசமும் வைத்திருப்பவர். ஒரு நாளும் மரியாதை குறை வார்த்தைகளால் அழைத்ததே கிடையாது. தண்ணீர் கொடுக்கிறார். குடித்த நீ ஓய்வு கொண்டார் என அறிந்து கதறினோம். அனைவரின் இதயமே நின்றது

எங்கள் இதயம் வெடித்தது
எங்கள் இமயம் சரிந்தது

''அய்யாவே மரணம் உங்களுக்கு இல்லை மனித நேயத்திற்குத்தான்''

**மணி மண்டபம்**

சிலையும், மணி மண்டபமும் கரம்பக்குடி அனைத்து கட்சியின உருவாக்கிட எண்ணினார்கள். அய்யா மறைவிற்குப் பின் இப்பகுதியில் அமைதி நீதியும் இழந்ததாக உணர்வு கொண்ட அனைவரும் ஒன்று கூடுகின்றனர். பிப்ர 16-ல் பொதுமக்கள் அனைவரும் ஒன்றாக அமர்ந்து ஒத்த கருத்துடன் கரம்பக்குடியில் நினைவு மண்டபம் எழுப்புவது என முடிவு எடுக்கின்ற அனைத்துக் கட்சி கூட்டத்தில் மணிமண்டபம் கட்ட முடிவு எடுத்து அய்யாவி இல்லத்திற்கு தொலைபேசியில் நண்பர் முன்னாள் பேரூராட்சி மன்றத் தலை திரு.எம். உடையப்பன் அவர்கள் என்னிடம் பேசுகிறார். ஊரில் முடிவை க குடும்பத்தில் அனுமதி பெற்றுத்தாருங்கள் என கேட்கிறார். இதயத்தையே இழ குடும்பத்தினரிடம் எப்படி பேசுவது என்ன பேசுவது என என் துன்பத் தெரிவிக்கிறேன். ஊரின் முடிவை சொல்ல உங்களுக்கு உரிமை உண்டு, அய் அவர்கள் பொது உடைமை, உங்களுக்கும் குறிப்பாக கரம்பக்குடி சேர்மன் என் புகழும், பெயரும் பெற்றவருக்கு கரம்பக்குடியில் நினைவு மண்டபம் தாங்க அமைப்பது மிகப்பொருத்தம் என்றேன். தொடர்ந்து தம்பி சிவஞானமூர்த் என்னிடத்தில் பேசி எங்கள் ஒப்புதலை கேட்டுப் பெறுகிறார். தம் சிவஞானத்திற்கு என கொடுக்கப்பட்ட பேரூராட்சி இடத்தில் கட்ட முடி செய்துள்ளோம். எங்களுக்கு அய்யாவின் அஸ்தி கலசம் ஒன்று தாருங்கள் என் நண்பர் உடையப்பன் மீண்டும் கேட்கிறார். சரி என்று கூறினேன். மணி மண்டப அமைப்பு குழத் தலைவராக அண்ணன் பெரியவர் ஜி.முத்தையா அவர்களும் சர்வகட்சியின் ஒன்றிய செயலாளர்களும் அனைத்து முக்கிய பிரமுகர்களு பேரூராட்சி மன்ற தலைவர் ஹாஜியார் முகமது கனி அவர்களும் கொண் திருப்பணிக்குழு அமைக்கிறார்கள். நினைவு மண்டபம் துவக்க விழ கல்விக்காவலர் பூண்டி வாண்டையார் அவர்கள் தலைமையில் கரம்பக்குடியி மணி மண்டபக்குழுவினரால் ஏற்பாடு செய்கின்றனர். தகுதி படைத்த பெரியவ மாமனிதர் பூண்டி அய்யா அவர்களால் துவக்கிவைத்து நிதி அளிப்பை அவ திருக்கரத்தால் ஆரம்பித்து வைத்தார். உயர்ந்த மனிதருக்கு மணி மண்டபம் பணிக துவக்கம். ஓராண்டு முழுதும் சென்ற இடமெல்லாம் நிதி குவிகிறது. யாரும் எதிர்பார்க்காத அன்பும், ஆதரவும் பெருகுகிறது. கரம்பக்குடி ஒன்றிய தொடக்கப் பள்ளி ஆசிரியர்கள் மட்டும் ரூ.$2\frac{1}{2}$ லட்சம் செலவில் மனித நேய மாண்பாளருக்கு

...செய்யும் செலவை மகிழ்வோடு ஏற்றுக் கொண்டனர். அவர் இதயத்தில் ...களுக்கு எப்போதும் தனி இடம்.

**...வும், வள்ளுவரும்**

...மணி மண்டபம் இரண்டு லட்சத்தில் கட்டிட திட்டம் தீட்டினர். ஆனால் ... லட்சம் மதிப்பில் நினைவாலயமும், இரண்டு லட்சம் செலவில் ஒரு நூலகம் ...னார்கள். இந்த புத்தாயிரம் ஆண்டில் அய்யன் வள்ளுவருக்கு தமிழகம் ...ரும் நூலகம் திறப்பு நடைபெறுகிறது. நம் அய்யாவுக்கு நூலகம் திறப்பு.

**முதல்வர் கலைஞர் ஒப்புதல்**

அய்யாவுக்கு முதலாம் ஆண்டு நிறைவு நாள் 11.02.2000. இந்த நாளில் சிலை திறப்பு விழா தமிழக முதல்வர் முத்தமிழ் அறிஞர் அவர்களை அழைத்து நடத்திட முடிவு செய்யப்பட்டது. புத்தாயிரம் ஆண்டில் குமரிமுனையில் அய்யன் வள்ளுவருக்கு சிலையை தமிழக முதல்வர் திருக்கரத்தால் திறந்து வைத்து ...ருக்கும், தமிழுக்கும் புகழ் சேர்த்தார்.

புதிய நூற்றாண்டில் அய்யனுக்கு சிலை. அடுத்து நமது அய்யாவுக்கும் சிலை திறப்பு. தமிழக முதல்வரால் திறந்து வைக்கப்படுகிறது.

குறள் தந்த வள்ளுவருக்கும் சிலை, குறள்நெறி வாழ்ந்த மனிதநேய மாண்பாளருக்கும் சிலை திறப்பு.

அவர் புகழ் சிறக்க அவர்வழி நடப்போம்.

வாழ்க பல்லவராயர் சரித்திரம் - வளர்க அவர் புகழ்.

---

அரைசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்று ஆவதூஉம்
உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோ ரேத்தலும்
ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதூஉம்
— இளங்கோவடிகள் சிலப்பதிகாரம்

மனிதன் எல்லாம் தெரிந்து கொண்டான்
மனிதன் எல்லாம் புரிந்து கொண்டான்
மனிதனாக வாழ மட்டும்
மனிதனுக்கு தெரியவில்லை.
— கவியரசு கண்ணதாசன்

## வகித்த பதவிகள்

1. அய்யா அவர்கள் பிலாவிடுதி ஊராட்சிமன்ற தலைவராக இரண்டுமு போட்டியின்றி தேர்வு செய்யப்பட்டார்.
2. 65,70-ம் ஆண்டுகளில் கரம்பக்குடி ஒன்றிய பெருந்தலைவராக இரண்டுமு தேர்வு செய்யப்பெற்று சிறப்பாக பணியாற்றினார். திருச்சி மாவட்டத் (புதுக்கோட்டை உட்பட) சிறந்தஒன்றியம் என்பதற்கான கேடயத்தை பெ பெருந்தலைவர்.
3. கரம்பக்குடி உயர்நிலைப் பள்ளியில் பெற்றோர் ஆசிரியர் கழகத் தலைவ ஒரு முறை பணியாற்றி பல லட்சம் ரூபாய் நன்கொடை பெற்று வகுப்பறைகளை கட்டிக் கொடுத்தார்.
4. மேல்நிலைப் பள்ளி கட்டிடக்குழுத் தலைவர், பெண்கள் உயர்நிலைப் ப பெற்றோர் ஆசிரியர் கழக தலைவராக தம் வாழ்நாள் வரை இருந்த கட்டிடக்குழுத் தலைவர் பதவியில் இருந்தார்.
5. சர்வகட்சி அமைதிக்குழு தலைவர்.
6. கரம்பக்குடி தென்னக இளைஞர் கால்பந்தாட்டக் கழகத் தலைவர், நிறுவன
7. மாவட்ட கால்பந்து கழக தலைவராக இரண்டுமுறை பணியாற்றினார்.
8. புதுக்கோட்டை சுப்பராமையர் பள்ளியின் தாளாளர்.
9. தமிழக ராஜீவ் காங்கிரஸ் மாவட்டத் தலைவர், மாநில துணைத் தலைவர்.

# கருவில் உருவான திரு

மனித நேய மாண்பாளர் அய்யா பல்லவராயர் அவர்கள் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து இனிது இப்பகுதி மக்கள் மனதில் தெய்வமாக நின்று கொண்டிருக்கும் அவர் வாழ்ந்து கொண்டிருக்கும்போது, இப்பகுதி மக்களின் நலனுக்காக பல வழிகளிலும் பாடுபட்டார். கரம்பக்குடி பகுதியை தாலுகாவாக மாற்றி பகுதி மக்களின் முன்னேற்றத்தைக் கருதி அதனை அடையும் பொருட்டு தமிழக மாண்புமிகு முதலமைச்சரைக் காண்பதற்காக சர்வ கட்சியினருடன், செல்லும்போது விபத்துக்குள்ளாகி இயற்கை எய்தினார். அவர் இறக்கும் போது உடன் விபத்தில் சிக்கிய மற்றவர்களுக்காக உயிர் துறந்தார்.

வாழ்வில் அவர் சிறந்த நீதிமானாகவும், சிறந்த விளையாட்டு வீரராகவும் இருந்தார். அவரின் நினைவாக சிறப்புச் செய்ய வேண்டுமென்று சர்வ கட்சியினரும் கூடிப் பேசியதின் விளைவாக, முதலில் பல இடங்களில் படத்திறப்பு விழா நடத்தியும், அதன் பிறகு மணி மண்டபம், சிலை அமைப்பு, படிப்பகம், மலர்வெளியீடு முதலியவைகள் செய்ய வேண்டுமென்று கருதி அந்தப் பணியினை சர்வ கட்சியினரும், பகுதி மக்களும் கரம்பக்குடிஒன்றிய ஆசிரியர்களும், மற்றவர்களும் திறம்பட பணியாற்றுகிறார்கள்.

அய்யா அவர்களின் படத்திறப்பு விழா சிறப்பாக கீழ்க்கண்ட இடங்களில் நடந்துள்ளது. முதன் முதலில் கரம்பக்குடி மேல்நிலைப் பள்ளியில் கல்வி காவலர் பூண்டி அய்யா துளசி அய்யா வாண்டையார் அவர்கள் அய்யா அவர்களின் திரு உருவப்படத்தை திறந்து சிறப்புச் செய்தார்.

அடுத்து கரம்பக்குடி அய்யா தலைமையில் நடந்து கொண்டிருக்கும் தென்னக இளைஞர் கால்பந்துக் குழுவின் சார்பில், டி.இ.எல்.சி. பள்ளியில் மாண்புமிகு, எஸ்.திருநாவுக்கரசு, எம்.ஏ.பி.எல்., எம்.பி., அவர்கள் அய்யா அவர்களின் திருவுருவப்படத்தை திறந்து வைத்தார்.

பின்னர் திருமிகு கொறடா துரை. கோவிந்தராசன் அவர்கள், கரம்பக்குடி ஊராட்சி ஒன்றிய ஆரம்பப் பள்ளியில் மனித நேய மாண்பாளர் பல்லவராயர் அவர்களின் திருவுருவப்படத்தை திறந்து வைத்துச் சிறப்பு செய்தார்.

பின்னர், முள்ளங்குறிச்சி கிராமத்தார்கள் பண்ணைவயல் பண்ணையார் திருமிகு. இராசாத்தம்பி அவர்கள் பல்லவராயர் அவர்களின் திருவுருவப்படத்தைத் திறந்து சிறப்புரை ஆற்றினார்கள்.

பின்னர் பிலாவிடுதி கிராமத்தார்கள் அய்யா அவர்களின் திருவுருவப்பட பண்ணைவயல் பண்ணையார் திரு. ராசாத்தம்பி அவர்கள் திறந்து வைத்துச் சி செய்தார்கள்.

பின்னர், குளந்திரான்பட்டு கிராமத்தார்களும், குளந்திரான்பட்டு ஆசிரியர்களும் சேர்ந்து, பல்லவராயர் அய்யா அவர்களின் திருவுருவப் பட அரபிக் கல்லூரி முதல்வர் ஜனாப் சதக்கத்துல்லா அவர்கள் மூலம் சிறந்து சிற செய்தார்கள்.

கரம்பக்குடி அக்ரஹாரத்தில், ஊராட்சி ஒன்றிய தொடக்கப்பள்ளி அனு கோவிலில் பெ.கலியமூர்த்தி தலைமையில், கே.வேலு அவர்கள் அய்யா அவர்க திருவுருவப்படத் திறப்பு விழா நடைபெற்றது.

திருமணஞ்சேரி - ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளியில் குரு (ஊ.ம.தலைவர்) அவர்கள் தலைமையில் அய்யா படத்திறப்பு விழா நடைபெற்

மனிதய நேய மாண்பாளர் அவர்களின் திருவுருவப்படம் இன்னும் இடங்களில் திறக்க இருக்கிறது. மக்கள் அனைவரது மனதில் தெய்வமாக இருக் மனித நேய மாண்பாளரின் புகழ் சிறக்க பல வகையிலும் செயல்பட தயார இருக்கிறோம்.

இப்படிக்கு,
மனிதநேய மாண்பாளர்
மணிமண்டப திருப்பணிக் குழுவின
கரம்பக்குடி

---

## அய்யாவின் இறுதி நாட்கள்

கரம்பக்குடி முருகன் கோயில் அருகில் உள்ள (திரையரங்கம் எதிரில்) திரு த.அருள்மொழி அவர்கள் (மலர் வெளியீட்டுக் குழுவின் செய்தி தொடர்பாளர் சூர்யா பர்னிச்சர் கடை திறப்பு விழாவில் தலைமையேற்று கடை திறந்த உரையாற்றினார். இதுவே அவர் இறுதியாக கரம்பக்குடியில் உரையாற்றியதாகும்.

கரம்பக்குடி சங்கிஸ் ரெஸ்டாரன்ட் எனும் தேநீர், குளிர்பான கடை திறப்பு விழாவில் கலந்து கொண்டதே கடைசி நிகழ்ச்சியாகும்.

கரம்பக்குடியை தலைமையாகக் கொண்டு வட்டாட்சியர் அலுவலகம் அமைய மேற்கொண்ட பயணமே இறுதிப் பயணமாகும்.

**அறந்தாங்கி இராசன்**
அறந்தாங்கி ஒன்றிய முன்னாள் பெருந்தலைவர்
தஞ்சை மாவட்ட தி.மு.க. முன்னாள் பொறுப்பாளர்
தி.மு.க. தலைமைக்கழக சொத்து பாதுகாப்புக்குழு உறுப்பினர்
சுப்பிரமணியபுரம் 614 805
அறந்தாங்கி வட்டம்
புதுக்கோட்டை மாவட்டம்
தொலைபேசி : 35234

நாள் : 18.1.200

# "பாசமலர் எங்கள் பல்லவராயர்"

நாட்டு மக்களால் பல்லவராயர் என போற்றப்படும் எனது ஆருயிர் நண்பர் துரை. விஜயரகுநாதன் அவர்கள் நினைவாக மலர் வெளியிடுவது சாலப் பொருத்தமுடையதாகும். மாமன்னர் குடும்பத்தைச் சேர்ந்த பல்லவராயரோடு புதுக்கோட்டை மாமன்னர் கல்லூரியின் மாணவர்களாய், கல்லூரி நண்பர்களாய், தொடங்கிய எங்கள் நட்பு ஒன்றியப் பெருந்தலைவர்களாய், அரசியல் இயக்கங்களின் பொறுப்பாளர்களாய், மக்கள் நலன் நாடும் மக்கள் தொண்டர்களாய் 45 ஆண்டுகள் வாழ்ந்த நினைவுகள் கண்களில் ஆறாய் வழிந்தோடுகிறது. கல்லூரியில் ஆண்டுதோறும் "சாம்பியன்" பட்டம் விஜயரகுநாதனுக்குத்தான். கால்பந்து, கிரிக்கெட், பூப்பந்து, ஓட்டப்பந்தயம் என அனைத்திலும் அவருக்குத்தான் முதல்பரிசு. அந்த உயரம், ஆஜானுபாகுவான உடல் அழகுத்தோற்றம், மாறாத புன்சிரிப்பு, வீரநடை அத்தனைக்கும் மறு பெயர் விஜயரகுநாதன். காட்சிக்கு எளியவர், கடுஞ்சொல் அறியார். பண்பின் இலக்கணம், பாசத்தின் உறைவிடம் எங்கள் பல்லவராயர். எங்கள் அறிமுகம் தொடங்கிய நாள் முதல், வாழ்ந்த காலம் எல்லாம், "வாடா, போடா" என உரிமையோடு அழைத்து உறவாடுவோம். நான் தி.மு.க. அவர் அன்று இந்திரா காங்கிரஸ். நெருக்கடி நிலையில் என்னை பாதுகாப்புக் கைதியாக திருச்சி மத்திய சிறையில் அடைத்திருந்தார்கள், ஓராண்டு. எனது பெருமுயற்சியால் சுப்பிரமணியபுரத்திற்கு தி.மு.க. ஆட்சியில் அனுமதிக்கப்பட்ட 24 படுக்கைகள் கொண்ட அரசு மருத்துவமனையை அரசியல் நோக்கத்தோடு வேறு இடத்திற்கு மாற்றிட கலெக்டர் தலைமையில் நடந்த மாவட்ட வளர்ச்சி மன்றத்தில் தீர்மானம் வருகிறது. நான் சிறைக் கொட்டடியில், எனது நண்பனுக்கு செய்தி அனுப்பினேன். "ஒரு ஒன்றியப் பெருந்தலைவர் எடுத்த முடிவை மாற்றிட இன்னொரு ஒன்றியப்

…தலைவராகிய நான் ஒருபோதும் துணை போக மாட்டேன். இதில் அரசியலுக்கு இடமில்லை'' என்று ஆணித்தரமாக வாதிட்டு, சுப்பிரமணியபுரத்திலேயே அரசு மருத்துவமனை திட்டம் செயல்படுத்தும் திட்டத்தை நிறைவேற்றியவர். இன்று பல்லாயிரக்கணக்கான ஏழை, எளிய மக்களுக்கு சிகிச்சை அளிக்கும், 24 படுக்கை வசதியுடன் கூடிய ''தமிழ்நாட்டிலேயே கிராமப்புறத்தில் இயங்கும், ஒரே ஒரு அரசு மருத்துவமனையான'' எங்கள் ஊர் மருத்துவமனை. பாசமலர் எங்கள் பல்லவராயருக்கு நிரந்தர நினைவுச் சின்னமாகும். அவர் மறைந்ததாக கூறினாலும் என் நெஞ்சில் வாழ்ந்து கொண்டிருக்கிறார். அவர் புகழ் வாழ்க!

---

மூ. பிரதிபா பி.ஏ.,பி.எல்)
கல்லாக் கோட்டை அரண்மனை, புதுக்கோட்டை

## நியாயந்தானா?



*சாவுக்கும் சாகாத உன் புகழை*
*சரித்திரத்தில் தீட்டுகின்றேன் - நான்*
*தீட்டும் காவியத்தை - தினம்*
*கண்ணீரில் படித்திருப்பேன்.*

*வானிறந்து போகவில்லை - கடல்நீரும்*
*வற்றித்தான் தீரவில்லை - இந்தக்*
*காற்றும்தான் ஓய்ந்த பாடில்லை - பொல்லாக்*
*காலனே உனை அழைத்தது நியாயமில்லை.*

*காலையில் நீ இருந்தால்*
*கலகலக்கும் நம் வாசல் - எமை*
*கதிகலங்க வைத்து - அந்தக்*
*காலன் உனை அழைத்தது நியாயமில்லை.*

*புனிதமெனும் பொருளுக்கு*
*பொருத்தமுள்ள புண்ணியனே*
*பூவுலக வாழ்வு பொய்யென நினைத்து*
*நீ போனதும் நியாயமில்லை.*

*கல்லூரி பள்ளிகளும்*
*கவின்மிகு ஆலயங்கள் மறந்து*
*ஊரெல்லாம் புலம்ப நீ*
*ஓய்ந்து சாய்ந்தாலும் நியாயமில்லை.*

*பார்கூடி பலர் காத்திருக்க*
*பார்வை ஒன்றால்*
*பஞ்சாயம் முடித்து வைப்பாய் பாரெல்லாம்*
*பதற நீ பறந்து சென்றது நியாயமில்லை.*

*அரசியல் குழப்பங்களா?*
*அண்டை வீட்டுப் பிரச்சனைகளா?*

அத்தனையும் அமைதியாய் தீர்த்த
அண்ணலே நீ அவ்வுலகம் சென்றதும் நியாயமில்லை.

பணம் காசு பெரிதல்ல - ஏழையின்
மனமொன்றே உயர்வென நம்பிய
மனிதநேய மாண்பாளரே - நீ
மாயமாய் மறைந்ததும் நியாயமில்லை.

பொருளாசை கொண்ட
பூவுலகில் மத்தியிலே
அருளாசைக் கொண்டு நீ
அவ்வுலகம் சென்றதும் - நியாயமில்லை.

எக்குலம் போற்றும்
நல்லவரே வல்லவரே - எங்கள்
பல்லவரே எரிதுயரில் துடிக்கவைத்து
எமனுலகம் சென்றதும் நியாயமில்லை

நீதிக்கு அரசர் அவ்வுலகில் இல்லையென
எங்கள் நீதி அரசரை - பொல்லாக்
கூற்றுவனே - நீ
கூட்டிக் கொண்டதும் - நியாயமில்லை.

கங்கையும் - காவிரியும்
கண்களில் கடலாட - பெரியப்பா
கதற வைத்து இக்கவி எனை-நீ
எழுத வைத்ததும் - நியாயமில்லை.... நியாயமில்லை!

தேதி : 13.1.

# இவர் ஒரு வரலாற்றுக் காவியம்

''தோன்றின் புகழோடு தோன்றுக அஃதிலார்
தோன்றினும் தோன்றாமை நன்று''

என்ற வள்ளுவத்தின் வாக்கினை மெய்ப்பித்தவர்கள் மிகச் சிலரே, பிறக்கு போது புகழுடன் பிறக்க வேண்டும் என்ற சிந்தனையில் தோன்றியதல்ல இக்குற மாறாக மக்களின் தலைவனாக, சமூகத்தில் சேவகனாக, அரசிய பொதுவாழ்க்கையில் நாணயம் உள்ளவர்களாக, மக்களின் நன்மை ஒன்றை கருத்தில் கொண்டு மக்களுக்காக வாழ்பவர்கள் மற்றவர்கள் புகழும் வண்ண இருக்க வேண்டும். இகழ்வதாயின் பொது வாழ்வில் புகுதல் வேண்டாம் என் சிறப்பான தத்துவத்தின் அடிப்படையில் தோன்றியது இக்குறள்.

உயர்ந்த வரலாற்றுக்குரிய குடும்பத்தில் பிறந்தவர் அமரர் துரை. விஜயரகுநா பல்லவராயர், மக்களால் 'துரை' என்றும் 'சேர்மன்' என்றும் அன்போடு அழைக்கப்பட்ட இம்மாமனிதர் வள்ளுவரின் வாக்கின்படி வாழ்ந்தவர் என்றால் அது மிகையாகாது. இவர் வாழ்ந்த கடைசிக் காலம் தமிழகத்தில் ஜாதி ம கொடுமைகளுக்கெதிரான போராட்ட காலமாக இருந்தது. இவரை பொறுத்தவரை சாதீயத்தில் நம்பிக்கையற்றவராக இருந்தார் என்பதும், எந்நாளும் தலித் இன மக்களிடம் நெருக்கத்தினையும், சகோதரத்துவத்தையும், அன்பினையும் பொழிந்தவராக ''எங்கள் நடமாடும் நீதிபதி'' என்று தலித் மக்கள் வாயார அழைக்கும் மாண்பாளராக வாழ்ந்து வந்தார்.

சிறப்புடையவர்கள் எந்த சமூகத்தை சேர்ந்தவராக இருந்தாலும் அவர்களுக்குரிய மரியாதையை வழங்குவதற்கும் கௌரவிப்பதற்கும் அவர் ஒருபோதும் தவறியதில்லை. இந்த சந்தர்ப்பத்தில் ஓர் ஆரிய உதாரணத்தினை இங்கு குறிப்பிட்டாக வேண்டும். 1986-87ல் இவரது பார்வையின் கீழ் உள்ள கிராமத்தில் உள்ள மாரியம்மன் கோவிலின் வருமானத்தை பெற்றுக் கொள்வதிலும் பராமரிப்பதிலும் உள்ள உரிமை தங்களுக்கே வேண்டுமென இரு ஜாதி இந்துக்கள்

விட்டுக் கொண்டதை அறிந்த திரு.பல்லவராயர் அவர்கள், அந்த கோவிலை பூட்டிவிட்டு, பிரச்சனைகள் தீரும் வரை அம்மன் அமைதியாக இருக்கட்டும் என்று கூறிவிட்டார். சில காலம் கழித்து இரு தரப்பினரும் சமாதானமாகி கோவிலை திறக்க கேட்டபோது ஆகம விதிகளின்படி குடமுழுக்கு செய்து கோவில் திறப்பதென்று முடிவானது. அந்த இரு பிரிவினரில் ஒருவர் குடமுழுக்கு செய்வதற்கு குன்றக்குடி அடிகளாரை அழைக்க வேண்டும் என்றும், மறு பிரிவினர் காஞ்சி காமகோடி ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளை வைத்து குடமுழுக்கு செய்வதென்றும் பிரச்சனை கொண்டு வந்தபோது, ஐயா அவர்கள் என்னுடைய மாவட்டத்திலேயே மிகப் பெரியவர் ஒருவர் இருக்கிறார். அவரை அழைத்து வந்து குடமுழுக்கு நிகழ்ச்சியினை நான் செய்கிறேன், மற்ற வேலைகளை நீங்கள் செயயுங்கள் என அனுப்பி விட்டார். அனைவர் உள்ளத்திலும் அவர் யாரென்பதை அறிய பேராவல் குடிகொண்டிருந்தாலும் ஐயா அவர்கள் மீது உள்ள மரியாதையினாலும் அவர்கள் முடிவினை ஆய்வு செய்வதை என்றென்றும் விரும்பாதவர்களாகவும் இருந்ததினால் நிகழ்ச்சி நாளன்று யாரென்று தெரிந்து கொள்வோம் என்று கலைந்தனர் அந்நாளும் வந்தது. குடமுழுக்கு நீரினை கரத்தில் வாங்கி தலையில் தெளித்துக் கொண்டு தங்கள் சிரமங்கள் எல்லாம் தொலைந்தது. அம்மன் அருளால் இனி என்றும் இன்பமே என்று மக்கள் கூடியிருந்தனர். நேரம் நெருங்கிய பொழுது, நான்கைந்து கார்கள் வந்து வரிசையாய் நிற்க, அக்காரிலிருந்து மக்கள் எதிர்பார்த்தது போல், சாமியார்கள் யாருமின்றி, சாமானியர் ஒருவர் இறங்கி வந்தார்.

ஐயா பல்லவராயர் அவர்களோ கூடியிருந்த மக்களை பார்த்து, இவர்தான் நான் குறிப்பிட்ட பெரியவர், இம்மாவட்டத்தின் ஆட்சித் தலைவர், இம்மாவட்டத்தின் இன்றைய மிகப்பெரும் பொறுப்பாளர், இவர்தான் இன்று கும்பத்தில் நீர் ஊற்ற போகிறார் என்று கூறி அவர்களை படியேற்றிச் சென்றார்கள், மந்திரம் ஓதிக்கொண்டிருந்த பார்ப்பனியம் அதிர்ந்து போய் நிற்க, ஜாதி இந்துக்கள் ஐயா அவர்களின் அன்பிற்கும் அவர்களின் சிறப்பான தீர்ப்புக்கும் கட்டுப்பட்டு நிற்க, கீழே கூடியிருந்த வெகுஜனம் அம்மனை மறந்து ஐயா பல்லவராயர் அவர்களை, வரலாற்று நாயகனை, மனமார வாழ்த்தி தரிசித்தனர். ஏனென்றால் அன்று கும்பத்தில் நீர் ஊற்றியவர் மாவட்ட ஆட்சித் தலைவர் என்றாலும், அவர் ஒரு தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சேர்ந்தவர். பகுத்தறிவு வாதிகள் கூட செய்யத் துணியாத இக்காரியத்தினை ஐயா அவர்கள் செய்து முடித்தாரென்றால் அது அவருடைய தீர்க்கமான சிந்தனையையும், சகோதரத்துவத்தையும், மனித நேயத்தோடு அனைவரையும் மதிக்கும் உயர் குணத்தையும் அனைவரக்கும் உணர்த்துகிறது. ஐயா அவர்கள், இன்னம் பலகாலம் எங்களோடு வாழ்ந்திருக்க கூடாதாவென ஏங்குகிறது எங்கள் மனம். அவரின் உயர் பண்புகளை எண்ணும்போதெல்லாம் நெகிழ்ந்து போகின்றோம்.

அவரின் இறப்புக்கூட அவர் அதிகம் நேசித்த கரம்பக்குடியை வட்ட அதிகாரத்திற்குட்பட்டதாக மாற்றவேண்டுமென்ற உயர்ந்த லட்சியத்தோடு ப செய்தபோது விபத்தாய் நிகழ்ந்து உயிர் துறந்தார்கள். அவருடைய இறுதிப்ப கூட பொது வாழ்க்கையை நோக்கியே சென்றடைந்து விட்டது. புதுக்கோ வரலாற்றில், ஐயா, 'துரை விஜயரெகுநாத பல்லவராயர் பெயர் காலம் கட நிலைத்திருக்கும். ஐயா அவர்களின் சமூக சேவையினை புத்தகமாக எழுத வே நாளினை ஆவலோடு எதிர்பார்க்கின்றோம். எனவே ஐயா அவர்கள் என்றெ ஓர் வரலாற்று காவியம் அவர் புகழ் ஓங்கட்டும்.

---

அன்பின், தூய்மையில், வாய்மையின் ஆர்வத்தில் ஒன்றாய் உடன்பிறப்புகள் இருங்கள்.

கௌதம

எவரெவர் எதைச் சம்பாதிக்கிறார்களோ அதற்கு அவரவரே பொறுப்பாளிக மேலும், ஒருவரின் சுமையை மற்றவர்கள் சுமக்க மாட்டார்கள்.

நபிகள் நா

உண்மை பேசுவோர் நீதியை நிலைநாட்டுவோர்; பொய் உரைப்போரோ, வஞ் நிறைந்தோர்.

பை

---



# மாமனிதன்

**எம்.உடையப்பன்,**
தலைவர், வர்த்தகர் சங்கம்
கரம்பக்குடி

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும் (குறள்)

*ஒரு அரிய (அதிசய) மனிதருக்கு ஆளுயரச் சிலை!*
*மக்களின் மனங்களில் கோலோச்சிய மாமனிதருக்கு மணிமண்டபம்!*
*அடிக்கடி நினைக்கிறேன்.*
*ஆச்சரியத்தில் விரிகின்றன என் அகமும், விழியும்!*
*ஆம். அதிசயமான மனிதர்தான் இவர்.*
*உதாரணம் காட்ட இயலாத உதாரணம் இவரது வாழ்க்கை!*

## ஒரு நிகழ்ச்சி

*இவரை அவர் வந்து பார்க்கிறார்.*
*இவர் : திரு.துரை விஜயரெகுநாத பல்லவராயர்*
*அவர் : அயல்நாட்டு அதிகாரி*
*விஷயம் சொல்கிறார். அவர். விஷயம் இதுதான்!*

*திரு.பல்லவராயர் அவர்களின் முன்னோர்களில் ஒருவர் அயல்நாட்டு பெண்ணை திருமணம் செய்துகொண்டு, சொந்த மண்ணை விடுத்து அங்கே குடியேறினார். ஒரு மகனும் பிறந்தார். பின்னர், அவர்களும் இறந்து, அவர்தம் மைந்தரும் அகால மரணம் அடைய, பின்னர், அவர்களும் இறந்து, அவர்தம் மைந்தரும் அகால மரணம் அடைய, அவர்களின் கோடிக்கணக்கான சொத்துக்கள் வாரிசின்றி அங்கே இருக்கின்றது. அவற்றை, இறந்தவர்களின் வம்சா வழியினரை பார்த்து ஒப்படைக்குமாறு அயல்நாட்டு அரசு ஆணை பிறப்பித்தது. அதிகாரியும் இந்தியா வந்து இறங்கி, திரு.துரை விஜயரகுநாத பல்லவராயர் தான் வாரிசு என்று அறிந்து வந்திருக்கிறார்.*

*''எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்டு வீட்டீர்கள் என்றால்*
*என்வேலை முடியும்!'' என்கிறார் அதிகாரி.*
*சுற்றத்தினர்கள் சூழ்ந்து இருக்கிறார்கள். இறந்தவர்களுக்காக அழுத அழுகை ஓய்ந்து அவ்விடத்தை, அதிர்ச்சியும், ஆச்சரியமும் அப்பிக் கொள்கிறது. ஆனால், தீர்க்கமான குரலில் திரு.பல்லவராயர் சொல்கிறார். ''அய்யா, அந்நியர் பெண் மேல் ஆசைப்பட்டு, இந்த மண் வேண்டாம், என்று போன மனிதரின் ஆஸ்தி எனக்கு வேண்டியது இல்லை. அது எத்தனை கோடி பெறுமானமாய் இருந்தாலும்!'' என்கிறார். அதிர்ச்சியில் உறைந்து போகிறார் அதிகாரி.*

இது அரிது. அபூர்வம்!
ஆசைப்படாத மனது - அவனியில்
ஒரு சிலருக்கே வாய்க்கும்.
எண்ணிப் பார்க்கிறேன்.
ஆண்ட நாடெல்லாம் அழிய மூண்டதே பாரதப் போர். அது
முன்னோர் சொத்தை முன்னிறுத்தித் தானே!
அதிசயமாய்த்தான் இருக்கிறது.
இவரின் பண்புகள்!

★ பொது வாழ்வில் மட்டுமல்ல-
சுய வாழ்விலும் சுத்தமானவர்!

★ மன்னர் பரம்பரை ஆயினும்
மக்களோடு மக்களாய் பின்னிக் கிடந்தவர்.

★ பணம் தேடி அலையாத பண்பாளர்.
அநியாய வழியில் அது தேடி வரினும்
அது கண்டு வீழாத ஆண்மையாளர்!

★ பதவிக்கு அணி செய்த அரசியல்வாதி!
உதவி செய்யவே பணியில் உட்கார்ந்தவர்.

★ நியாயமான நீதிபதி. இவரால்
எண்ணற்ற கலகங்கள் தீர்ந்தன.
ஏராளமான உயிர்கள் மீந்தன.

★ கற்றவர். கல்வியாளர்,
பள்ளியைப் பயன்படுத்தியவர்.
மாணவர் வாழ்வுக்கு விழி எனில்
ஆசிரியர் வாழ்வுக்கு ஒளி!

★ விளையாட்டு வீரர்.
நெடிய உருவம், நீண்ட கரங்களும்
தளரா உடலும், தாழாத தலையும்
அவர்தம் திறமைக்கு
அடையாளங்கள்!

★ விளையாட்டை விளையாட்டாய்க் கருதாமல்
விருப்பமோடு வளர்த்தவர்!

**காடம்பட்டி வி.வெங்கடாசலம் நாயுடு**
முன்னாள் ஊராட்சித் தலைவர்,
பாப்பாப்பட்டி.



# பல்லவராயரின் பத்தாண்டு சாதனைகள்

பல்லவராயர் கரம்பக்குடி ஊராட்சி ஒன்றியப் பெருந்தலைவராக தேர்வு ...போது நான் பாப்பாரப்பட்டி ஊராட்சித் தலைவராகப் பணியாற்றி வந்தேன். ...ள் நெருங்கிய நண்பர்களாக திகழ்ந்தோம். அவர் ஒன்றியப் பெருந்தலைவராக ...ந்தபோது நான் ஒன்றிய நியமனக்குழு உறுப்பினராகத் ...தெடுக்கப்பட்டேன். தற்பொழுது கரம்பக்குடி ஊராட்சி ஒன்றியத்தில் ...யாற்றும் துவக்கப்பள்ளி ஆசிரியர்களில் பெரும்பாலோர் அவரால் பணியில் ...த்தப்பட்டவர்கள்.

ஊராட்சி ஒன்றியக் கூட்டங்கள் குறிப்பிட்ட காலக்கெடுவுக்குள் தவறாது ...பெறும். கூட்டங்கள் அமைதியாகவும் கண்ணியத்துடனும் நடத்தப்படும். ...ப் பெருமை பல்லவராயருக்கு உரியதாகும்.

பல்லவராயர் சேர்மனாக இருந்த காலத்தில் திருச்சி மாவட்டம், புதுக்கோட்டை ...வட்டத்தையும் உள்ளடக்கியதாக இருந்தது. ஒருங்கிணைந்த திருச்சி ...ட்டத்தில் கரம்பக்குடி ஊராட்சி ஒன்றியம் 1965-66 மற்றும் 1966-67 ஆகிய ...டுகளில் சிறந்த ஊராட்சி ஒன்றியமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பரிசு பெற்றது. ... பல்லவராயரின் நிர்வாகத் திறமையை பிரதிபலிப்பதாக இருந்தது. அவர் ...ருந்தலைவராகப் பணியாற்றிய காலத்தில் ஒன்றியத்திற்குட்பட்ட அனைத்துக் ...மங்களிலும் பள்ளிகள் துவங்கப்பட்டு கட்டிடங்களும் கட்டி முடிக்கப்பட்டன. ...ரும்பாலான கிராமங்களுக்கு சாலை வசதி, குடிநீர் வசதி ஆகியவைகள் செய்து ...டுக்கப்பட்டன. அவர் காலத்தில் இரண்டு ஒன்றிய மருத்துமனைகள் ...க்கப்பட்டு எம்.பி.பி.எஸ் டாக்டர்கள் நியமிக்கப்பட்டார்கள்.

1967 ஆம் ஆண்டில் தேர்தல் நிதியாக ரூ.5000/- தமிழக முதல்வர் ...ருந்தலைவர் காமராஜ் அவர்களிடம் வழங்கி அவரது அன்பைப் பெற்றவர் ...லவராயர். அதுமுதல் கதராடை அணிந்து பெருந்தலைவர் காமராஜர் அவர்களின் ...ராக காங்கிரஸ் பேரியக்கத்தில் சேர்ந்து பணியாற்றத் துவங்கினார். ...ண்டுதோறும் ஊராட்சி ஒன்றியத்தில் குடியரசு தின விழாக்களை, சிறந்த ...வர்களைக் கொண்டு பட்டிமன்றங்கள் நடத்தி சிறப்பாகக் கொண்டாடிய ...ருமை பல்லவராயரைச் சாரும். சமுதாய நலத்திட்டங்கள் பற்றிய மாநாடுகள் ...ும் கருத்தரங்கங்களில் திருச்சி மாவட்டத்தின் சார்பாகக் கலந்து கொண்டு ...ந்த பெருந்தலைவராகப் பிரகாசித்தார். திருச்சி மாவட்டத்தில் அப்போது பதவி ...த்து வந்த பெருந்தலைவர்களில் மிகவும் சிறந்தவராக, பல்லவராயர் ...காரிகளாலும் அரசியல் தலைவர்களாலும் போற்றப்பட்டார்.

காட்சிக்கு எளியவர்; கடுஞ்சொல் பேசாதவர்; இனிய முகத் எல்லோரிடமும் பழகியவர். சிறந்த விளையாட்டு வீரர். கிராம பிரச்சனைகளையும் தனிப்பட்டோர் பிரச்சனைகளையும் அலசி ஆராய்ந்து தீர்ப்புக் கொடுக்கும் அறிவாளர், மத வேறுபாடு இல்லாமல் எல்லோரிட அன்பு காட்டியவர்.

பொதுநல சேவை புரிவதில் மற்றவர்களுக்கு அவர் எடுத்துக்காட் விளங்கியவர். உதவி என்று வந்தவர்க்கு உதவும் பண்பாளர். அரசியல் வேறுபாடின்றி அனைத்துப் பிரிவினரிடமும் சமமாகப் பழகியவர். இன்று மறைவுக்குப் பின் அவர் மீது அன்பு பாராட்டி அவர் நினைவைப் போற் வகையில் எடுக்கப்பட்டிருக்கும் நடவடிக்கைகளே இதற்குச் சான்றாகும்.

ஆசிரியர்கள் இவருக்குச் சிலை வடிக்கின்றனர். அனைத்துக் கட்சியின இவரின் நினைவைப் போற்றி மணிமண்டபம் அமைக்கின்றனர். இந்த நிகழ்வ அவரின் சான்றாண்மையை நமக்குத் தெரிவிக்கின்றன.

பெருந்தலைவர் ராஜகுடும்பத்தைச் சேர்ந்தவர். புதுக்கோட்டை மன்னரு விசுவாசமாக இருந்தவர். மன்னரால் போற்றப்பட்டவர். தனக்கென எதை விரும்பாதவர். பிறருக்கு உதவும் பண்பாளர்.

பல்லவராயரும் நானும் நெருங்கிய நண்பர்களாகத் திகழ்ந்தோம். எங் இருவரின் கருத்துக்களும் ஒன்றாகச் சங்கமித்ததே இதற்குக் காரணம். எங்கள் ந ஆழமானது. பழகப்பழக இன்பம் தரும் நட்பு அவரது நட்பு.

''நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடையாளர் தொடர்பு''

அவரைப் பிரிந்து அவர் குடும்பத்தினர் வாடுகின்றனர். அவரோடு பழ அனைவரும் வாடுகின்றனர். அவரை இழந்து வா பல்லாயிரக்கணக்கானவர்களில் நானும் ஒருவன்.

''இளையர் இவரெமக்கு இன்னம்யாம் என்று
புனையினும் புல்லென்னும் நட்பு''

என்ற வள்ளுவனின் கருத்துக்கிணங்க எங்கள் நட்பினைப் பற்றி அதிகம் பேசா விடுகிறேன்.

அவரது மறைவுக்குப் பின்னர் நாம் ஆற்றவேண்டிய செயல்கள், நினைவி கொள்ள வேண்டிய சிந்தனைகள் ஏராளம்.

சாதி மத வேறுபாடின்றி அனைவரும் ஒன்றாக வாழ்வதும், ஒருவருக்கொரு உதவி செய்து அன்பாக இருந்து கிராம முன்னேற்றத்திற்காகப் பாடுபடுவது அவருக்கு நாம் செய்யும் சிறந்த அஞ்சலியாகும்.

வரைவாளர்

**திரு. இராம சுப்பிரமணியன் காடுவெட்டியார்**

பொதுச் செயலாளர்

தமிழ்நாடு மூவேந்தர் முன்னேற்றக் கழகம்

புதுக்கோட்டை



# ''மனிதம் வளர்த்த புனிதன்''

...சித் தமிழரசோச்சிய தண்டமிழ் வேந்தர் தொண்டைமான் வேந்தர் ஆளுகைக்குட்பட்ட ஆலங்குடி வட்டத்தின் கண் உள்ள சிற்றூர் பிலா விடுதி. ... சிறப்பின் இசை விளங்கும் பெருங்குடவிச் செல்வந் மாசணுகா மாமனிதன் ...றொண்டால் மனித நேய மாண்பாளர் எனப் போற்றப்பட்ட இறந்தும் ...ப்பு கழுக்குரியோன் அமரர் துறை விஜய ரெகுநாதப் பல்லவராயர் இவரே ...ட்டுரைத் தலைவன்.

''தோன்றிற் புகழொடு தோன்றுக'' என்னும் குறள் வழி பிறக்கும் போதே ... கெழு மன்னர் தனித்தமிழரசோச்சிய தண்டமிழ் மன்னர் 'இராஜ ரிஷி' எனப் ...ற்றப்பட்ட அமரர் இராசகோபால தொண்டைமான் அவர்களின் மாமன் மகனாய் ...ன்றியவர். துள்ளித் திரியும் பள்ளிப் பருவத்திலே ஊரார் போற்ற உலகோர் ...ட்ட நீதி வழங்கிய பெருமகன். இன்னார், இனியார், உறவோர், பகைவர் ... எண்ணாது ஓரம் சாராமல் சோரம் போகாமல் நீதி வழங்கிய நிகழ்ச்சிகள் ....

கல்லூரிப் படிவத்தில் விளையாட்டு தடகளம் இரண்டிலும் பெரும் வீரராய்த் ...ந்தவர். அவர் புகழ் சாற்றும் வகையில் மாமன்னர் கல்லூரியில் ...ருமைக்குரியோர் பட்டியல் பலகையில் (Honour Board) படித்த காலம் முழுதும் இவர் பெயர் தாங்கி நிற்பதைக் காணலாம். அதுமட்டுமல்ல கால்பந்து விளையாட்டில் இணையற்ற வீரராய் திகழ்ந்தவர். அனைத்து கல்லூரிகள் கால்பந்துக் குழுவில் (Inter Collegiate Foot Ball Team) சென்னை தவிர்த்த பிற மாவட்டங்களிலிருந்து தேர்வு பெற்ற ஒரே வீரர் இவரே. விளையாட்டுத் துறையில் வல்லரணாகத் திகழ்ந்தது போன்றே சமுதாயத் துறையிலும் வலிமை மிக்க அரணாகத் திகழ்ந்தவர். எப்பேர்ப்பட்ட பஞ்சாயத்தாக இருந்தாலும் எவர் மனமும் நோகாமல் வழக்குகளில் நியாயத் தீர்ப்பளித்து ''சமன் செய்து சீர்தூக்கும் கோலாய் ...ர்ந்து நின்றவர்.

கரம்பக் குடியைத் தனி வட்டமாக ஆக்க வேண்டும். கொள்ளிடம் உபரி நீரால் மாவட்டம் செழிக்க வேண்டும் என்பதற்காக அயராது பாடுபட்ட உத்தமன்

பணிவாய்ச் சிரிப்பால் எல்லோரையும் மகிழ வைத்த திருமகன், கனிவாய் உயர் இமயம் நிகர்த்தோன் அத்தொண்டில் ஈடுபாடு கொண்டிருக்கும் போதே விபத்தி மரணம் எய்தினார் என்பது உலகை உலுக்கியது. அந்த மனிதநேய மாண்பாளருக் மணிமண்டபம் எழுப்பி திருவுருவச்சிலையைச் சமைத்து நாட்டி அறக்கட்டளைய நிறுவி அவர் புகழ் என்றும் நிலைத்திட என்றும் நம்மோடு வாழ்ந்திடச் செ கரம்பக்குடி வட்டாரப் பெருமக்களுக்கும் மற்றையோருக்கும் பாராட்டுக்கள வாழ்த்துக்களை கூறி நன்றி பாராட்டுகிறேன்.



மனிதனை எது அடிமையாக்குகின்றதோ அது அவன் தகுதியில் பாதியை அழித்த விடுகின்றது; தகுதியில்லாத புகழ்ச்சி மறைமுகமான அவதூறாகும்.

பைபிள்

**உலகம்**

'உலகம் நல்லது' என்று நம்புங்கள். 'உலக மக்கள் நல்லவர்கள்' என்று நம்புங்கள். 'எங்கும் இன்பம் சிதறிக் கிடக்கிறது' என்று நம்புங்கள். 'உங்கள் வாழ்க்கை நிச்சயமாக இன்பமானதாகவும், சுவை நிறைந்ததாகவும் இருக்கும்' என்று நம்புங்கள். நல்லதையே நம்புங்கள். அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டவர்களால் தான் வாய்விட்டுச் சிரிக்க முடியும். நம்பிக்கையுடன் காட்சி தருபவர்களைத் தான் அனைவரும் விரும்புவார்கள்.

அல்ஹாஜ் மௌலவி S. சதக் கத்துல்லா உலவி
முதல்வர்,
அல்பத்திரிய்யா அரபிக் கல்லூரி, கரம்பக்குடி



# மனித நேய மாண்பாளராக மிளிர்ந்த மாமனிதர்

கல்வி, அறிவியல், பொறியியல், புவியியல், தொழில்நுட்பம், கலைநுட்பம், விண்வெளி ஆய்வு அணு ஆற்றல் ஆகிய துறைகளில் மனிதனின் ஆற்றல் திசைப்பட்டு உலகத்தை தன் வயப்படுத்தி வெற்றி அடைந்து இருக்கின்ற காலம் இது.

முன்னேற்றப் பாதையில் வெற்றிக்கொடி நாட்டிக் கொண்டிருக்கும் மனிதன், ஒழுக்க பண்பாட்டிலும், வாழ்க்கை முறைகளிலும், வீழ்ச்சியின் பக்கம் சென்று கொண்டிருக்கிறான். இருபதாம் நூற்றாண்டின் இறுதிகாலத்தில், உத்தம நபிகள் நாயகம் போதித்த ஒழுக்கம், நேர்மை, நீதி தவறாமை, பிறர் பொருளுக்கு ஆசை இல்லாமல் இருப்பது, பெண்களின் கண்ணியம் காப்பது, பெரியவர்களை மதித்து நடப்பது, சிறியவர்களிடம் அன்பு பாராட்டுவது போன்ற அரிய செயல்கள் அய்யா பல்லவராயரின் வாழ்வின் அமைந்திருப்பதை பலமுறை அடியேன் கண்ணுற்று வியப்பு அடைந்து உள்ளேன். மேலும் அய்யாவிடம் நெருக்கமானவர்களிடமிருந்து நிறைய செய்திகளை அய்யாவைப் பற்றி அறிந்து உள்ளேன்.

"உன்னை எதிர்த்து வாழ்பவனையும்
உனக்கு தீங்கிழைத்தவனையும், மன்னித்துவிடு,
அவனுக்கு உபகாரம் செய்"

என்று அவர்களும் இன்னல் செய்தவர்களையும், இடுக்கண் விளைவித்தவர்களையும் மன்னித்து, அவர்களுக்கு உபகாரம் செய்த செய்தியை கேள்விப்பட்டு இருக்கிறேன். இந்த அரிய பண்புகள் அருமை நாயகத்திடம் இருந்த நற்பண்பு ஆகும். இந்த நற்பண்புகள் இக்கால மனிதர்களிடத்தில் அய்யா அவர்களிடம் அமைந்து இருந்ததை எண்ணி எண்ணிலா மகிழ்ச்சி அடைந்துள்ளேன்.

நீதியை நிலைநாட்டுவதில் அய்யா, அவர்கள் எந்தவித சலனங்களுக்கும் ஆட்பட மாட்டார்கள் என்பதை நான் பலமுறை அவர்களின் நீதி பரிபாலன சபைகளில் கண்ணுற்று உள்ளேன். இந்த அரிய உயரிய பண்பு உத்தம நபிகள் நாயகத்தின் பண்பு என்பதனை எண்ணி அய்யா அவர்களிடம் உள்ளத்தை பறி கொடுத்து இருக்கின்றேன்.

நபிகள் நாயகம் தனது எதிரியான வீட்டிலும் மாற்று சமயத்தவர்களின் வீட்டிலும் நடைபெறும் இன்ப, துன்ப நிகழ்ச்சியிலும் கலந்து கொள்வார்கள்.

எந்த உயிரற்ற மனித சடலத்திற்கும் எழுந்து நின்று மரியாதை செய்வார் அந்த வாழ்க்கை நெறியை அய்யா அவர்களிடம் கண்டு களிப்படைந்து உள்ளே

நபிகள் நாயகம் கல்வியை ஆண் பெண் இருபாலருக்கும் கடம ஆக்கினார்கள். அய்யா அவர்களும் இறுதி மூச்சு உள்ளவரை கல்விக்க அரும்பணியாற்றினார், கல்வியாளர்கள், சிந்தனையாளர்கள் போன்றவர்களிட மிகச் சிறந்த தொடர்பு வைத்திருந்தார்கள், இந்த உயரிய பண்பு கல்விக் காவலர அவரை உயர்த்தியது.

அய்யா அவர்கள் மனித நேயத்தை போற்றுபவராக, மற்ற சமூக மக்கள அரவணைத்து செல்பவராகவும், மிகச் சிறந்த ஒழுக்க நெறி பின்பற்றுபவராகவும், நீதி அரசராகவும், பெண்களின் கண்ணியத்தை போற் கண்ணியவானாகவும் வாழ்ந்து மனித நேயத்தை வளர்த்த மாண்பாளராக இருப்ப கண்ணுற்றோம்! யோசித்தோம்!! அதற்கு பிறகுதான் அய்யா அவர்களுக் கரம்பக்குடி அல்பத்திரிய்யா அரபிக் கல்லூரியின் செனட் சார்பாக ''மனித நே மாண்பாளர்'' என்ற உயரிய விருதை அளித்து நாங்கள் பெருமைப்பட்டோம்.

நாங்கள் வழங்கிய அந்த சீரிய விருது தமிழகம் முழுவதும் மிளிர்வதை எண் அய்யா அவர்களுக்கு நாங்கள் செய்த நன்றியாக நினைத்து மன ஆறுத அடைகிறோம்.

அய்யா அவர்களின் வாழ்க்கை நெறி, நபிகள் நாயகத்தின் வாழ்க் நெறியோடு இணைந்து இருந்ததை எண்ணி பெருமைப்படுகிறோம், அவர்க வாழ்ந்த காலத்தில் நாங்களும் வாழ்ந்தோம் என்பதை எண்ணி பெருமை கொள்கிறோம்.

**தமிழரசன்,**
தொழிலதிபர், மும்பை - 37

## நேர்மையின் உதயமே! நீதியின் சிகரமே!!

குழந்தையின் அழகு முகம்
புன்ன கையில் கொண்டவரே.
மஞ்சள் குங்குமத் திலகமாய்
மன்னவரில் உயர்ந்தவரே.... அய்யா
முக்குலத்து உயிர் மூச்சு
பொன் முத்துராமலிங்கத் தேவர் போல
எங்கள் குடும்பத்தில் விளக்காக
இருந்தவரே... அய்யா பல்லவராயர்.
வீர நடை போட்டு
ராஜனாக இருந்த போது - நாங்கள்
சேமப்படைபோல் குலம் பார்க்க
பின் நின்றோம்!
உன் சேவை மனப்பான்மை
வானம் போல் விரிந்திருக்க.. அங்கு
பால் வடியும் உன் முகம்
பளிச்சென்று மின்னுதய்யா நிலாவைப் போல!
நேர்மையின் உதயமாய்...
நீதியின் சிகரமாய்
சிங்கமென இருந்தவரை... இயற்கையின் நெஞ்சம்
இரங்காமல் பிரித்தாலும்,
உன் நேர்மை - பணிவு - அடக்கம் - லட்சியமனைத்தும்
தர்மம் எங்களிடம் தந்தது.
காப்போம் - நற்கடமை செய்வோம் உலகுக்கு.
இருந்தாலும் உன் நினைவை என் நெஞ்சு விட்டு விலகாது அய்யா.

**தலைமை ஆசிரியர்,**
அரசு மேல்நிலைப் பள்ளி
கரம்பக்குடி - 622 302
புதுக்கோட்டை மாவட்டம்
☎ 55328

# சமுதாய நீதிபதி

**அ**ரசமரத்தைச் சுற்றினால் ஆண்டவன் அருள் கிட்டும் என்பார் பெரியோ ஆனால் கரம்பக்குடி அரசு மேல்நிலைப்பள்ளியின் வேப்பமரத்தைச் சுற்றி அய் பல்லவராயர் தலைமையில் நடைபெற்ற கூட்டங்களில் சமுதாய மக்களுக்கு நீ கிடைத்தது அதனால் சமுதாயத்திற்கு அமைதி கிடைத்தது. இலட்சியத் அடையும் வரை நில்லாது செல்லுங்கள் - என்ற சுவாமி விவேகானந்தர் கூற்று கிணங்க கடைசி வரை வாழ்ந்திட்ட பெரியவர். அய்யாவின் தேச பற்றினை ஒவ்வொரு சுதந்திர தினத்தின் போதும், குடியரசு தினத்தின் போதும் கண் துஞ்சா விழா சிறக்க மேற்கொண்ட உழைப்பையும் தியாகிகளை கௌரவித் பெருந்தன்மையும் கண்டு அரசு அதிகாரிகள், பொதுமக்கள், மாணவர்கள் ஆசிரியர்கள் அனைவரும் வியந்திட்ட நாட்களை எண்ணிப் பார்க்கிறோம்.

மக்கள் பிரதிநிதிகள் என்னென்ன நன்மைகள் செய்யலாம். எப்படி எல்லா அரசு விதிகளை பின்பற்றலாம் என முன்னாள் சேர்மன் இன்னாள் பிரதிநிதிகளுக் வழங்கிய ஆலோசனைகள் மக்கள் பணிக்கு தொடர்ந்து கொண்டேயிருக்கும் கரம்பக்குடியின் அந்தஸ்து உயர தன்னுயிர் தந்திட்ட மன்னர் வழி மாமேதைக் எங்களின் கண்ணீர் அஞ்சலியை காணிக்கையாக்குகிறோம்.

இவண்
**தலைமை ஆசிரியர் மற்றும்**
**ஆசிரியர்கள், ஆசிரியைகள், மாணவர்கள், மாணவிகள்**
**அலுவலர்கள் அரசு மேல்நிலைப்பள்ளி, கரம்பக்குடி**

---

நம்பிக்கைத் துரோகம் செய்பவனையும் பாவம் புரிவதையே வழக்கமாகக் கொண்டவனையும் இறைவன் நேசிப்பதில்லை.

**நபிகள் நாயகம்**

கே.எஸ்.பாலையா
இணை செயலாளர்
மாநில ராஜீவ் காங்கிரஸ்
ஆலங்குடி

# என் இதயத்தில் ஓர் இனிய தலைவர்

நீதியின் அரசர், மனிதகுல மாமனிதர், நீதியின் சின்னம், பெருந்தலைவர் காமராஜ் அவர்களின் நேர்மையான தளபதி. இப்படி பல்லவராயரைப் பற்றிப் பேசுவது, எழுதுவது என்பது உண்மை. முற்றிலும் உண்மை.

சொன்னதை செய்தவர். செய்வதை சொல்லுவார். இவரின் இயற்கை குணம் எளியவர்களின் போர்வாள். இல்லாதவர்களுக்கு அட்சய பாத்திரம்.

நான் பழகிய தலைவர்களில் மிக இனிமையானவர். அவரின் சிரிப்பே நேர்மையான தீர்ப்பு.

நல்லவர்கள், நீண்ட காலம் வாழ வேண்டும். ஆனால் அது எங்கே இம்மண்ணில் நடை பெறுகிறது. அப்படியுள்ளவர்களில் பல்லவராயரும் ஒருவர். அவர் புகழ் பாட என்றும் உறுதி கொள்வோம்.

**சிறந்த நிர்வாகி,**
**சிறந்த விளையாட்டு வீரர்,**
**சிறந்த கல்வியாளர்,**
**சிறந்த நீதிமான்.**

பல்லவராயர் புகழ் இவ்வுலகம் உள்ளவரை நிலைக்கும். அவர் புகழ்பாடும் என்றென்றும் அவரின் தொண்டன்.

---

**உழைப்பு**

**மற்றவர்களுக்குத் துன்பம் தராமல், தனக்கு வேண்டியதைப் பெற உழைக்கும் உழைப்பு, தெய்வத்திற்கு முன்பு மண்டியிட்டு வணங்குவதைப் போன்று மிகவும் பரிசுத்தமானது.**

நல்லாசிரியர் கா.மு.அ. முத்தலிபு



# என்னைவிட்டு ஏன் சென்றாய்.....

எங்கோ அலைந்து கொண்டிருந்த என்னை - கால்பந்தாட்ட விளையாட் மூலம் உறவு கொண்டு பள்ளியில் சேர்ந்து படிக்க உதவி செய்தாய். அன்று மு இன்றுவரை நாம் பிரியவில்லை. ஆனால் என்னைவிட்டு இன்று ஏன் பி சென்றாய்.

என்னை தன்னோடு இணைத்துக் கொண்டு தன்னருகில் வைத்து உணவ வளர்த்தாய். 1962இல் என்னை ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் சேரவை அரண்மனையில் தங்க வைத்து உணவும் கொடுத்து படிக்க வைத்தாய். ஆ இன்று தனியனாய் என்னை விட்டு நீ மட்டும் தனியனாய் சென்று விட்டாய்

1961இல் தங்களின் திருமணத்தின்போது என்னை மாப்பிள்ளைத் தோழ மகிழ்ந்தாய். அதோடு 1964இல் பயிற்சி முடித்த எனக்கு பணியிலும் அம வாழ்வளித்தாய். 1964 ஏப்ரல் 30ஆம் நாள் கரம்பக்குடி ஒன்றியத் பெருந்தலைனாகி அப்பணிக்கே பெருமையும், புகழும் சேர்த்தாய். அன்றைய நா நடந்த என் திருமணத்தையும் நடத்தி வைத்து என் வாழ்க்கைப் பயணத் ஒளியேற்றி, என்னை நல்லாசிரியன் என்ற அரசு விருதும் பெறுவதற்கு என வழிகாட்டியாகவும் விளங்கிய பெருந்தகையே! என்னை இவ்வுலகில் விட்டு மட்டும் சென்றது என்ன நியாயம்.

முக்குலத்திலே பிறந்திருந்தாலும் - என்குல விளக்காய் போற்றி மகிழ்ந்தே 1996இல் பணி நிறைவு பெற்ற எனக்கு மோதிரம் அணிவித்து பாராட்டின அவ்விழா ஏற்புரையில் நான், காலனிடம் வேண்டினேன் உங்களுக்கு முன்ப என்னுயிர் பிரிய வேண்டும் என்று, ஆனால் தாங்களும் என்னை ஏமாற் விட்டீர்கள். காலனும் என்னை ஏமாற்றிவிட்டான்.

1999ஆம் ஆண்டு பிப்ரவரி 11ஆம் நாள் காலைப் பொழுது துக்கநாளா கறுப்பு நாளாக, துயர்ச் செய்தியினை தன்னுடன் சேர்த்துக் கொண்டே விடிந்த சங்கொலி காதில் கேட்டு துவண்டு எழுந்தேன். படுக்கையை விட்டு, எழுந் தெருவில் உற்றுப் பார்த்தேன். அய்யகோ.... ஒரே கூட்டம், கூக்குரல்களின் ஒல என் செவியில் கேட்டது.

க.ராமையா, பி.ஏ.,
பொதுச் செயலாளர்
தமிழ்நாடு கள்ளர் பேரவை

# அண்ணன் பல்லவராயர் - சில நினைவுகள்

1957-58 கல்வியாண்டு, புதுக்கோட்டை மாமன்னர் கல்லூரியில் புகுமுக வகுப்பு மாணவன் நான். சென்னைப் பல்கலைக்கழகக் கால் பந்தாட்டக் குழுவில் ஒருவராக அண்ணன் பல்லவராயர் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்தி அறிந்து கல்லூரியே விழாக் கோலம் கொண்டது. இச்செய்தியினைத் தொடர்ந்து கல்லூரி விளையாட்டுத் திடலில் கால்பந்தாட்டம் நடைபெறும் பொழுதெல்லாம் நான் முதல் ஆளாக வேடிக்கை பார்ப்பதும் அண்ணனின் விளையாட்டின் நளினம் கண்டு பரவசப்படுவதும் வாடிக்கை. என் உற்சாகத்தை அவரும் பார்த்திருக்கிறார். இதற்கிடையில் அண்ணன் அவர்கள் புதுக்கோட்டை மாமன்னர் குடும்பத்தை சேர்ந்தவர் என்பதும், மன்னர் ஆட்சி இல்லை என்றாலும் புதுக்கோட்டை நகரில் மன்னர் ஆட்சி கால தடையங்கள் மறையாமல் இருந்ததும், மக்கள் மனதில் மன்னர் குடும்பத்திற்கு இருந்த மரியாதை கலந்த பக்தியையும் கண்டு வந்த நான் அண்ணனின் எளிமையான பழக்கவழக்கங்களினால் கவரப்பட்டிருந்தேன். ஆனால் அவரோடு பேசியதும் இல்லை, பழகியதும் இல்லை. ஒரு நாள் மாலைப் பொழுதில் கால் பந்தாட்டப் பயிற்சி முடிந்து நண்பர்கள் புடைசூழ வந்த அவர் என்னைப் பார்த்து உன் பெயர் என்ன? ஊர் எது? என்ன படிக்கிறாய்? என்ற விபரங்களைக் கேட்டறிந்தார். என் மகிழ்ச்சிக்கு அளவில்லை. என் கல்லூரி வாழ்க்கை ஓராண்டுதான்.

ஆலங்குடியை அடுத்த பாத்தம்பட்டி என்ற கிராமத்தில் கிராம மணியக்காரரின் மகனாக, சாதாரண விவசாயக் குடும்பத்தில் பிறந்து பட்டிக்காட்டுச் சூழ்நிலையில் வளர்ந்து ஓராண்டுக்கு மேல் கல்லூரிக் கல்வியை தொடர முடியாத சூழ்நிலையில் விவசாய வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்த எனக்கு அண்ணனின் திருமண அழைப்பு அஞ்சல் வழியாக கிடைத்ததும் என் உள்ளம் ஆனந்தக் கூத்தாடியது. தோற்றத்தில் நான் அரையடி உயர்ந்தவிட்டது போல் பூரிப்பு திருமண விழாவில் கலந்து கொண்டு பாரதிதாசன் ''குடும்ப விளக்கு'' புத்தகத்தை திருமணப் பரிசாக வழங்கி மகிழ்ந்தேன்.

விவசாய வேலைகளுக்கிடையில் மாலை நேரங்களில் ஆலங்குடியில் அரசினர் நூல் நிலையத்திற்கு தவறாது செல்வதும், அங்கு கிடைக்கும் செய்தித்தாள்கள், வாரப் பத்திரிக்கைகள், இலக்கியங்கள் படிப்பதும் எனது வாடிக்கை. நான் பிறந்த இனம் எந்த அளவிற்குக் கல்வியில், அரசுப் பணிகளில், சமுதாயப் பார்வையில்

பின் தங்கியிருக்கிறது என்பதை நான் உணரத் துவங்கினேன். இக்காலக் கட்டத் புதுக்கோட்டை மத்திய கூட்டுறவு வங்கியில் 1960 நவம்பரில் தற்காலிக எழு பணி எனக்கு கிடைத்தது. இந்த வாய்ப்பை எனக்கு வழங்கியவர் என்றும் நினைவில் வாழும், அப்பொழுது மத்திய கூட்டுறவு வங்கியின் தலைவரா பொறுப்பேற்றிருந்த வீரடிப்பட்டி கிராமத்தை சேர்ந்த மதிப்பிற் வணக்கத்திற்கும் உரிய நடேசன் அம்பலகாரர் அவர்கள், அப்பெருமகனார் அந்த வாய்ப்பு சமுதாயத்தின் அடித்தளத்தில் இருந்த பிற்படுத்தப்பட் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வேலை வாய்ப்புகள் வழங்குவதின் அவசியத் எனக்கு உணர்த்தியது. சற்றேறக்குறைய பத்து ஆண்டுகள் மத்திய கூட்டுற வங்கியின் தலைவராகப் பணியாற்றிய அப்பெருமகனார் அரசு பணிகளிலு கூட்டுறவு இயக்கத்திலும் ஐந்நூறுக்கும் அதிகமான பிற்படுத்தப்பட் தாழ்த்தப்பட்ட இன இளைஞர்களுக்கு வேலை வாய்ப்புக்களை ஏற்படுத் கொடுத்தார். வீண் அவதூறுகளுக்கிடையிலும் இப்பணியில் அவர் காட்டிய ஆர்வ அதற்காக அவர் காட்டிய நடைமுறை வேகம் எனக்குப் பாடமாகிற்று. இடைப் சில காலம் அரசுப் பணிக்குச் சென்ற நான் அவரால் ஈர்க்கப்பட்டு மீண் மத்திய கூட்டுறவு வங்கிப் பணிக்கு வந்தேன். இச்சமயத்தில் அண்ண பல்லவராயர் அவர்கள் கரம்பக்குடி ஊராட்சி ஒன்றியத்தில் பெருந்தலைவரா தேர்ந்தெடுக்கப்பட்டுப் பொறுப்பேற்றார்கள்.

கரம்பக்குடி ஊராட்சி ஒன்றிய பெருந்தலைவராக அவர்களாற்றி அரும்பணிகள், இளைஞர்களுக்கு வேலைவாய்ப்பு அளிப்பதில் அவர்க பின்பற்றிய நேர்மையான நடைமுறைகள், தவறு செய்துவிட்டவர்கள நல்வழிப்படுத்துவதிலும், அவர்களுக்கு வாழ்வளிப்பதிலும் அவர்கள் காட்டி புதிய பாதை, கிராமங்களில் நடைபெறும் பஞ்சாயத்துக்களில் அவர்கள் வழங்கி தீர்ப்புக்கள் அண்ணாரின் புகழை, பெருமையை நாளுக்கு நாள் உயர்த்தி கொண்டே வந்த செய்திகள் கேட்டு நான் பூரிப்படைவேன்.

அண்ணன் அவர்களை அடிக்கடி சந்திக்கும் வாய்ப்புகள் குறைவு என்றாலு சந்திக்கும் பொழுதெல்லாம் அவர் என் பால் காட்டிய அன்பும் பரிவும் என் நினைவில் நீக்கமற நிறைந்துவிட்டது.

மத்திய கூட்டுறவு வங்கியில் இரண்டாம் நிலை அதிகாரியாக நான் இருபத்தைந்து ஆண்டுகள் பணியாற்றினேன். தன்னிச்சையாக முடிவெடுக்கும் அதிகாரம் எனக்கு இல்லை என்றாலும் பிற்படுத்தப்பட்ட சமுதாய மக்கள் யாரா இருந்தாலும் அவர்களுக்கு உதவ வேண்டும் என்ற என் தணியாத வேட்கை மாவட்டம் முழுவதிலும் எனக்கு நண்பர்கள் கூட்டத்தை விரிவுபடுத்திக் கொண்டே வந்தது. அண்ணன் பல்லவராயர், அண்ணன் திரு.பெரியண்ணன், சகோதரா முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர் திரு.சுந்தரராஜ், கல்லாகோட்டை

ராமச்சந்திரதுறை போன்ற பெருமகன் சொல்லும் வேலைகளை செயலாக்குவதில் நான் எவ்வித தயக்கமும் காட்டியதில்லை. மறைந்தும் தெய்வமாக வாழும் இப்பெருமக்களின் தூண்டுதல் பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு, என் சக்திக்குட்பட்டு வேலை வாய்ப்பில், கல்வி வளர்ச்சியில், பொருளாதார வளர்ச்சியில் உதவிட எனக்கு உத்வேகத்தை அளித்தது.

1994ம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் நான் புதுக்கோட்டை மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கியின் செயலாளராகப் பொறுப்பேற்றேன். எனக்குக் கிடைத்த அந்த வாய்ப்பிற்காக அண்ணனை மகிழ்ந்ததும், என்னைப் பாராட்ட இராசராசன் கல்வி பண்பாட்டுக் கழகத்தின் சார்பில் மிகப் பெரிய விழாவெடுத்து இராசராசன் கல்வி பண்பாட்டுக் கழகத் தலைவர் மதிப்பிற்குரிய காங்கேயர் அவர்கள் தலைமையில் புதுக்கோட்டையில் உள்ள அனைத்து அரசியல் கட்சி தலைவர்களையும் அழைத்து எனக்கு பாராட்டு தெரிவித்து மோதிரம் அணிவித்து பெருமைப்படுத்தியதும் என் உயிர் உள்ளளவும் என் நெஞ்சை விட்டு அகலாத நினைவுகள்.

தன்னிச்சையாக முடிவெடுக்கும் அதிகாரத்துடன் முதல் நிலை அதிகாரியாக 1997 ஏப்ரல் இறுதிவரை நான் புதுக்கோட்டை மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கியின் செயலாளராக பணியாற்றிய காலத்தில் எனக்குக் கிடைத்த, சட்டத்திற்கு உட்பட்ட வாய்ப்புகளையெல்லாம் அண்ணன் சுட்டிக் காட்டிய, சமுதாய முன்னேற்றத்திற்கு உதவுகின்ற, படித்த இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பளிக்கின்ற, கல்வி வசதி பெருக்கிட உதவும் பணிகள் அனைத்தும் செய்து முடித்திருக்கிறேன்.

இப்பணிகளில் எனக்கு இன்னல்கள் வந்தபொழுதெல்லாம் நான் பிறந்த சமுதாயம் முன்னேற வேண்டும் என்ற வேட்கையால் யாருக்கெல்லாம் நான் ஏணியாக இருந்தேனோ அவர்கள் எனக்கு இன்னல்கள் விளைவித்த பொழுது அண்ணன் அவர்கள் துடித்துப் போன நிகழ்வுகள் என் கண்களில் இரத்தக் கண்ணீராக மாறும். தனக்கு கிடைத்த வாய்ப்புகளையெல்லாம் எந்தச் சமுதாயம் முன்னேற வேண்டும் என்று இலட்சியத்திற்காகப் பயன்படுத்தினரோ அந்தச் சமுதாயம் அவரது வெற்றி வாய்ப்புகளை ஆலங்குடி சட்டமன்றத் தேர்தலிலும் புதுக்கோட்டை நகர்மன்றத் தலைவர் தேர்தலிலும் தட்டிப் பறித்த பொழுது நான் அனலிடைப் புழுவாகத் துடித்திருகுகிறேன். என் நெஞ்சம் நிறைந்த அண்ணன் ஒரு அரசியல் அதிகாரம் பெற்ற பதவியில் அமரும் வாய்ப்பில்லாமல் போய்விட்டதே என ஏங்கினேன். என்னால் வேறு என்ன செய்ய முடியும்?

அண்ணன் அவர்கள் சாலை விபத்தில் சிக்கி திருச்சி மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருந்த பொழுதும் புகழுடம்பெய்தி புதுக்கோட்டை வந்த பொழுதும் கூடிய மக்கள் வெள்ளம் அண்ணன் அவர்கள் இந்தச் சமுதாயத்திற்கு ஆற்றிய பெரும் பணிகளுக்குச் சான்றாக அமைந்தது. அவர்கள் நினைவாக

கரம்பக்குடியில் மணிமண்டபம் அமைத்து, அறக்கட்டளை நிறுவி, நினைவு ம வெளியீட்டு, செய்ய வேண்டிய ஒரு கடமையினைச் சிறப்பாக செ முடித்திருக்கும், தொடர்புடைய அனைவரும் பாராட்டுக்குரியவர்கள்.

**மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை**

**என்னோற்றான் கொல் எனும் சொல்** - என்ற குறள்நெறி நின்று செயல்ப வரும் திரு.விஜயரவிபல்லவராயர் தந்தையின் மங்காப் புகழோடு குலப் பெருமை குடிப்பெருமை, காப்பார் என்பது என் அசையாத நம்பிக்கை.

வாழ்கின்ற எஞ்சிய காலத்தில் அண்ணன் பல்லவராயர் அவர்களி கொள்கைகளை, இலட்சியங்களை நிறைவேற்ற வாய்ப்புக் கிடைத்தால் அது எனக் கிடைக்கும் பெரும் பேறு.

**அ. திருமூர்த்தி**
ஓய்வு (மாவட்ட நில அளவையாளர்)
நரங்கியபட்டு, கரம்பக்குடி

# பல்லவராயருடன் நான்

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும் - குறள்

மனித நேய மாண்பாளர் நமக்கெல்லாம் காவல் தெய்வமாக இருந்து மறைந்து விட்ட மனிதத் தெய்வத்துடன் என்னுடைய வாழ்க்கையில் பிணைந்துள்ள தொடர்பினை இக்கட்டுரை மூலம் விளக்குகிறேன்.

**விளையாட்டில் பல்லவராயர்**

நானும் பல்லவராயரும் நாங்கள் நான்காம் வகுப்பு படிப்பதிலிருந்து அறிமுகமானவர்கள். கரம்பக்குடி நடுநிலைப்பள்ளியாக இருக்கும் போது ஒன்றாகப் படித்தோம். அப்பொழுது பள்ளியில் வகுப்புகள் ஆரம்பிக்கும் போதே கால்பந்து விளையாட்டிற்கு இரண்டு டீம்களாகப் பிரித்து ஆண்டு பூராவும் அந்த இரண்டு அணியில் இருப்பவர்தான் கால்பந்து ஆடுவார்கள். டீம்கள் பிரிக்கும் போது இரண்டு பேர்களை காப்டனாக நியமித்து, இரண்டு பேர்களையும் அவர்களுக்கு வேண்டியவர்களை அழைக்கும்படி ஆசிரியர் கூறுவார். அதன்படி நமது பல்லவராயர், ஒரு காப்டனாகவும், காலஞ்சென்ற நடராசன் (பஞ்சாயத்தில் பில் கலெக்டராக பணியாற்றியவர்) மற்றொரு காப்டனாகவும் நியமிக்கப்பட்டார்கள். முதலில் யார் அவர்களுக்கு வேண்டியவரை அழைப்பது என்பது ஒரு பிரச்சனையாக இருந்து முடிவில் பல்லவராயர் அழைப்பது என்று முடிவாகி, அவர் என்னை அவருடைய டீமுக்கு உறுப்பினராக முதலில் அழைத்தார். அடுத்தபடியாக நடராசன் ஒருவரை அழைத்தார். அழைத்தவர்களில் ஒருவர் பல்லவராயரின் தம்பி; இந்த இரண்டு டீம்களும் விளையாண்டதில் ஆண்டு முழுவதும் பல்லவராயர் காப்டனாக இருந்த டீம்தான் வெற்றி பெறும். இந்நிலையில் எனக்கும் பல்லவராயருக்கும் சண்டை வந்து என்னை அடித்து விட்டார். அதனால் அடுத்த இரண்டு தினங்களில் நடக்க இருக்கும் கால்பந்து போட்டியில் நான் விளையாட முடியாது. என்று மறுத்துச் சொன்னேன். அதை அறிந்த அவர் வேறு ஒரு பையனிடம் காலணா கொடுத்து இதற்கு மிட்டாய் வாங்கி திருமூர்த்தியிடம் கொடுத்து ஆடச் சொல்லுங்கடா என்று கூறினார். அவர் சொன்ன உடன் அன்று மேட்சில் ஆடி வெற்றி பெற்றோம்.

ஜனாப் குத்தூஸ் ராவுத்தர் கரம்பக்குடி சேர்மனாக தேர்ந்தெடுத்த போது ஒரு

விளையாட்டு விழா நடத்தினார். அதில் நானும் பல்லவராயரும் ஒன்றாக வெற்றி பெற்றோம். அடுத்து தடை ஓட்டத்தில் ஓடும் போது முதலில் பெஞ்சுக் நுழைந்து ஓடி கடைசியில் பெஞ்சு ஒன்று போட்டிருப்பதைத் தாண்டி ஓடி மு வேண்டும். ஓட்டம் ஆரம்பித்தவுடன் பல்லவராயர் முதலில் ஓடினார். அவரு ஓடிய மற்றவர் பெஞ்சுக்குள் நுழையும் போது அவரை அமுக்கி விரைவாக முடியாமல் செய்துவிட்டார். பிறகு, ஓடிய நான் தனியாக இருந்த பெஞ்சி அடியில் ஓடி அவரை விட 25 அடிகள் முன்பாக ஓடினேன். அவ்விதம் ஓடி இறுதியில் உள்ள பெஞ்சைத் தாண்டும் போது பல்லவராயரும் என்னுடன் ஒன் பெஞ்சை தாண்டினார். ஆனால் பெஞ்சில் அவருடைய கால் இடித்து விட்ட அவரால் இறுதியில் ஓடி வெற்றி பெற முடியாத நிலையில் நான் வெற்றி பெற்றே கால்பந்து விளையாட்டு நாங்கள் இளைஞர்களாக இருக்கும் போது மிக சுறுசுறுப்பாக நடந்து கொண்டிருந்தது. நாங்கள் ஒவ்வொரு நாளும் மா கால்பந்து விளையாடிய பிறகு பஞ்சாயத்து அலுவலகத்திற்கு முன்பு உ பங்களாக் குளக்கரைப் படிக்கட்டில் உட்கார்ந்து அந்த படிக்கட்டிற்கு அப்பொழு நாங்கள் வைத்த பெயர் அறிவு எழுச்சிகள் என்று பல அறிஞர்களைக் கொண் பட்டி மன்றமும் நடத்தினோம். அதில் எழுவர் கால்பந்து தொடர் போட்டி நட வேண்டுமென்று தீர்மானித்தோம். சேர்மன் அவர்கள் எதை நடத்த வேண்டுமென் சொன்னாலும் அதை முழுமையாக சரிவர நடத்த அப்போது பணியில் இரு டாக்டர் மைக்கேல் கரம்பக்குடி பஞ்சாயத்து மன்றத் தலைவர் ஜனாப் முகம சுல்தான் காலம் சென்ற பி.இடி. வைரமூர்த்தி, இராமசாமி, திருமேனிநாதன் நடராசன், நாகலிங்கம், முத்தலிப்பு இன்னும் பலர் தயாராக இருப்போம். தென்ன இளைஞர் கால்பந்துக் குழு ஒன்றை நிறுவி முதன் முதலில் சேர்மனை தலைவராக்கினோம். என்னை செயலாளராகவும், முத்தலிப்பு (ஆசிரிய அவர்களை பொருளாளராகவும், திருமேனி நாதனை துணைச் செயலாளராகவு நடராசனைத் துணைத் தலைவராகவும் நியமித்து பல ஆண்டுகள் எழுவர் கால்பந் தொடர் போட்டிகள் நடத்தினோம். தென்னக இளைஞர் கால்பந்துக் குழுவின் தலைவராக ஆன பிறகு பல இயக்கங்களில் அவர் கௌரவ தலைவராக ஆனா கரம்பக்குடி மேல்நிலைப் பள்ளியின் கட்டிடக் குழுத் தலைவர் ஆனார். அதன் நிலம் கரம்பக்குடி பள்ளிக் கட்டிடங்கள் பல கட்டுவதற்கு உறுதுணையாக இருந்தார். என்னையும் பள்ளியின் பெற்றோர் ஆசிரியர் கழகத் தலைவராக ஆக்கினார். அவர் புதுக்கோட்டை பிரகதாம்பாள் உயர்நிலைப் பள்ளியில் விளையாட்டில் சிறந்து விளங்கினார். பிறகு புதுக்கோட்டை மன்னர் கல்லூரியில் பயிலும் போது மூன்றாண்டுகள் தொடர்ந்து விளையாட்டுப் போட்டியில் சாம்பியனாக வந்தார். இந்த மூன்றாண்டுகளில் ஓராண்டில் இவர் சாம்பியனாக வருவது மிகவும் கஷ்டமாக இருந்தது. இவரும், மற்றொருவரும் தலா மூன்று போட்டிகளில் முதன்மையாக வந்திருந்தார்கள். 100 மீட்டர் போட்டியில் இருவரும் ஒன்றாக ஓடவேண்டிய நிலை. இதில் யார் முதல்வராக வருபவர்களுக்கு சாம்பியன் பட்டம் கிடைக்கும், சேர்மன் பல நாட்கள் காலை 5 மணிக்கே புதுக்கோட்டை

துக்குளத்திற்குச் சென்று கடுமையான பயிற்சி மேற்கொண்டு 100 மீட்டர் இறுதி ட்டத்தில் ஜெயசீலன் என்ற அந்த நபரை வெற்றி கொண்டார். ஒரு ஆண்டு பந்து போட்டியில் யுனிவர்சிட்டி விளையாட்டு வீரர்களைத் ந்தெடுப்பதற்காக சென்னை சென்றார். அங்கு செலக்சன் நடந்தது. இவரை முறை திடலில் இறங்கி விளையாடச் சொல்லி இறுதியில் யுனிவர்சிட்டி ளையாட்டு வீரராகத் தேர்ந்தெடுத்தார்கள். அந்த ஆண்டு தேர்ந்தெடுத்த அனைத்து களும் சென்னையைச் சேர்ந்தவர்கள். இவரைத் தவிர, இவர் மட்டிலும் தான் துக்கோட்டையில் இருந்து தேர்ந்தெடுத்தார்கள். ஆண்டுதோறும் நடக்கும் லூரிகளுக்கு இடையேயான போட்டியில் திருச்சி ஜமால் முகமது கல்லூரிக்கும், துக்கோட்டை கல்லூரிக்கும் போட்டி நடந்தது. இரண்டு நாட்கள் இரண்டு ணிகளும் வெள்ளி தோல்வியின்றி முடிந்தது. இதில் நமது சேர்மன் தலைமையில் வரது இளவல் இராமச்சந்திரனும் விளையாண்டார்கள். ஜமால் முகமது லூரியில் மிகவும் பிரபலமாக விளையாடிக் கொண்டிருந்த மனோகரன் அவர் ருக்குச் சென்றிருந்தவரை அழைத்துக் கொண்டு வந்து ஆடச் சொன்னார்கள். ளையாட்டு ஆரம்பித்து 10 நிமிடங்களில் மனோகரன் நன்றாக விளையாடி பந்தை ர்மனிடம் ஏமாற்றி பந்தை எடுத்துச் சென்றார். சேர்மன் இராமச்சந்திரா என்று வரது தம்பியிடம் கூறியவுடன் தம்பி பந்தோடு சேர்த்து மனோகரனை அடித்தார். னோகரன் செத்தேன் என்று கூறி தரையில் வீழ்ந்தார். அவரை திடலை விட்டு வளியில் தூக்கி வந்தசர்கள். பிறகு இனிமேல் நான் இங்கு ஆடினால் உயிரோடு ரும்பி வரமாட்டேன் என்று சொன்னார். இருப்பினும், அவரைச் சமாதானப்படுத்தி ட்டத்தை தொடர்ந்து ஆடினார்கள். இந்த வெற்றி புதுக்கோட்டை கல்லூரி ாணவர்களுக்கே கிடைத்தது. இதற்கு முக்கிய காரணமே நமது சேர்மன்தான். வர் வாழ்நாளில், அவர் ஈடுபட்ட வெற்றி அடைந்த விளையாட்டுக்களைச் சால்வதென்றால் இடம் பத்தாது என்ற காரணத்தால் இத்துடன் முடிக்கிறேன். வர் ஒரு சிறந்த விளையாட்டு வீரராய் திகழ்ந்ததால் தான் எல்லோருக்கும் ல்லவராக வல்லவராக இருக்க முடிந்தது.

### ஞ்சாயத்தில் பல்லவராயர்

பஞ்சாயத்து என்றால் பல்லவராயர். பல்லவராயர் என்றால் பஞ்சாயத்து என்ற லை அவர் காலத்தில் நடந்தது. எந்த மதத்தினரும் மத வேறுபாடுயின்றி அவரிடம் சென்றால் நமக்கு நல்ல வழிகாட்டுவார் என்று இப்பகுதி மக்கள் அனைவரும் ம்பினார்கள். பல ஆண்டுகளுக்கு முன்பு எனக்கும் என்னுடைய சித்தப்பா கனுக்கும் நடந்த நிலப்பிரச்சனை சேர்மனின் பஞ்சாயத்துக்கு வந்தது. பிரச்சனையை இரண்டு பேர்களும் எடுத்துச் சொன்னோம். அப்போது இருந்த ணிகர் அந்த நிலச் சம்மந்தமாக தவறான விளக்கத்தை அளித்ததின் மூலம் சேர்மன் என்னிடம் அந்த நிலத்தில் 1 மா நிலத்தை என்னுடைய பங்காளிக்குக் கொடுக்கும்படி சொன்னார். நான் அவருக்கு 1 மா கொடுப்பதற்கு எந்தவித உரிமையும் இல்லாது இருந்தும் சேர்மன் சொன்னார் என்பதால் 1 மா நிலம்

கொடுத்து விட்டேன். இதனால் எனக்கு எந்த மனக் கஷ்டமும் இல்லை நஷ்டமுமில்லை. அதன் பிறகு தான் நானும் என்னுடைய பங்காளி ஒற்றுமையாக இருந்தோம். அவரிடம் எல்லோரும் அவர்களின் குடும்ப விவகா முதல் உறவினர் சண்டை போட்டுக் கொண்டாலும் இவரிடம் தான் பஞ்சாயத் வரவேண்டும் இல்லை. ஒரு முறை நானும் சேர்மனும் கால்பந்து திடலில் ஒ மாலை தனியாக உட்கார்ந்து இருந்தோம். சிறிது நேரத்தில் நான் கடைக்குச் சென் வருகிறேன் என்று அவ்விடத்தை விட்டுச் சென்று விட்டேன். அப்போது தனியா இருந்த சேர்மேனிடம் ஒரு 20 வயது பெண் வந்து தன்னை ஒருவர் ஏமாற் கெடுத்து விட்டதாகவும் அதற்கு அய்யா ஏதாவது ஒரு நல்ல வழியைச் செய்யுங் என்றும் சொல்லியதும், சேர்மனும் அதற்கு ஏதோ சொல்லிக் கொண்டிருந்தா அப்போது நான் அங்கு வரவே, அந்தப் பெண் அங்கிருந்து சென்று விட்ட நான் சென்றதும், சேர்மேனிடம் கேட்டேன். அவர் விபரம் சொன்னவுடன், இ மாதிரி பஞ்சாயத்தும் உங்களிடம் வருகிறதா என்று கேலியாகக் கேட்டேன். அந் பெண் வந்து குறையைச் சொல்லும் போது, நான் கேட்க முடியாது என்று சொல் முடியுமா? என்று சிரித்துக் கொண்டே சொன்னார். இந்த நிகழ்ச்சியை ஏன் இங் குறிப்பிட விரும்புகிறேன் என்றால், சேர்மேனிடம் நம்பிக்கை வைத்து அவரிட சென்றால், நமக்கு நியாயம் கிடைக்கும் என்று உறுதியோடு இருந்தார்கள் என் தெரிவிக்கும் பொருட்டுதான். இவர் முடித்து வைத்த பல பஞ்சாயத்துக்களை பற்றி சொல்ல வேண்டுமென்றால் பல நாட்கள் சொல்லிக் கொண்டே இருக்கலாம் நாங்கள் இருவரும் இள வயதிலிருந்தே ஒன்றாக விளையாடி, ஒன்றாக ப நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டிருந்ததால் என்னிடம் மாறாத அன்புடன் இருந்தார் எனக்கு சைக்கிள் ஓட்டக் கூட கற்றுக் கொடுத்தார். தாலுகா கமிட்டி அமைக்கு போது கூட என்னை அக்கமிட்டிக்கு பொருளாளராக இருக்கும்படி பணித்தார் எந்த நேரத்திலும் அவருடன் இருந்தேன். கடைசியில் கார் ஆக்ஸிடண்ட் ஆகும் போது கூட நானும் அவர் கூடத்தான் இருந்தேன். எங்கள் 9 பேருக்காக அவ இயற்கை எய்தி, இந்த நாட்டிற்காக பெரிய தியாகத்தைச் செய்திருக்கிறார். அவ இயற்கை எய்தியதற்கு முன்பு கூட என்னையும் அவருடைய திருமகனார் விஜய ரவி பல்லவராயருடன் ஒரு நிலத்தில் கூட்டுப் பட்டாதாரர் ஆக்கி எப்பொழுதும் எங்கள் குடும்பம் அவர் குடும்பத்துடன் கூட்டாக இருக்கும்படி செய்திருக்கிறார். பலவகைகளில் எனக்கு உற்ற துணையாகவும் காவல் தெய்வமாகவும் இருந்த சேர்மன் என்னை விட்டு விட்டுச் சென்று விட்டார். நான் தற்போது வாயில்லாத ஊமையனாக கலங்கிக் கொண்டிருக்கிறேன். வாழ்வாங்கு வாழ்ந்து வானுரையும் தெய்வமாக திகழ்ந்து கொண்டிருக்கும் என்னுடைய இதய தெய்வத்தின் நினைவாகவே என்னுடைய கடைசி காலத்தை கழித்துக் கொண்டிருக்கிறேன். எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத பல்லவராயர் புகழ் என்று சங்கே முழங்கு.

சுபம்

**உ.இராமையா,** தலைவர்,
(தமிழ்நாடு விவசாயிகள் சங்க மாவட்ட தலைவர்)
எம்.எம்.380, அம்பக்கோவில் தொ.வே.கூ.வங்கி லிட்.
அம்புகோவில், பிலாவிடுதி.



# மனித தெய்வம் அய்யா

அம்பக்குடி பகுதி மக்களின் வேதனை தீர்த்த விடிவெள்ளி திரு.துரை விஜயரெகுநாத பல்லவராயர் அவர்கள் 1931ம் ஆண்டு டிசம்பர் திங்கள் 5ம் நாள் திருமிகு.துரைச்சாமி பல்லவராயர் - ஜானகி அம்மாள் தம்பதியினரின் அருந்தவப் புதல்வராய் பிலாவிடுதியில் அவதரித்தார். அய்யா அவர்கள் அவதரித்த புண்ணிய மண்ணில் பிறந்தவன் என்பதிலும், அவரோடு இளவயதிலிருந்து ஓடியாடி ஒக்க வாழ்ந்தவன் என்பதிலும் பூரிப்பு அடைகிறேன். பூவோடு சேர்ந்திட்ட நார் போல அய்யாவுடன் பழகிய இனிய நாட்களினை இதயத்தில் அசைபோட்டு இக்கட்டுரையை உங்கள் முன் சமர்ப்பிக்கிறேன்.

அய்யா அவர்கள் செல்வாக்கும், சிறப்பும் மிக்க ராஜ குடும்பத்தில் தோன்றிய மாமனிதர் ஆவார். மன்னருடைய நெருங்கிய உறவும், ஆதரவும் அவரது குடும்பத்திவன் செல்வாக்கினை மேன்மேலும் மெருகூட்டியது. அய்யாவின் சகோதரர் திரு.துரை ராமச்சந்திர பல்லவராயர் அவர்கள் அறநிலையத் துறையில் உயர் அதிகாரியாக பணியாற்றி ஓய்வு பெற்றுள்ளார்.

அய்யாவின் தந்தை தன் மகன்களுக்கு அறிவாற்றல் பெருகிட பொது நிகழ்ச்சிகளுக்கு அவர்களை அழைத்து வருவார். ஒரு சமயம் பிலாவிடுதி ஸ்ரீ பிள்ளையார் கோவிலுக்கும் அழைத்து வந்தார். அப்போது திருக்குறளில் அன்புடைமை எனும் அதிகாரத்தைக் கூறி அதில் என்னையும், அய்யாவையும் ஆளுக்கொரு குறள் கூறச் சொன்னார. அதில் நாங்கள் இருவரும் ஆளுக்கொரு குறள் கூறியதைக் கேட்டு அகமகிழ்ந்தார். அனைவரும் பாராட்டினர்.

திருவிழா, பொங்கல், கார்த்திகை தீபம் ஆகிய பொது நிகழ்ச்சிகளுக்கு அழைத்து வந்து பருலடைய அறிமுகமும், அனுபவமும், பாராட்டும் பெற வைத்தார். ''விளையும் பயிர் முளையிலே தெரியும்'' என்பதற்கு இணங்க அய்யா திகழ்ந்தார். இளவயதில் துள்ளித்திரியும் பள்ளி நாட்களில் கால்பந்தாட்டத்தில் அவர் ஒரு புலியாகவே விளங்கினார். மாநில அளவில் கூட பதக்கமும், பட்டமும் பெற்றார். நானும் அவரும் கபடியில் கட்டிப்புரண்டு எழுந்திட்ட அந்த நினைவுகள் அந்த நாளும் வந்திடாதோ என்று இளமைக் கால எண்ண அலைகள் என்னை மெய்சிலிர்க்க வைக்கின்றன.



# தமிழக ராஜீவ் காங்கிரஸ்

*(சிறுபான்மை பிரிவு)*

**THAMIZHAHA RAJIV CONGRESS**

**(MINORITY CELL)**




strict President.

.S.M.A. ALHOWTHER, D.Pharm.,


Date.........



வார்த்தைகளை கூட்டி
வாசித்துப் பார்க்கிறேன்
அதில் உங்கள் தர்மம், நேசத்தின்
வாசம் என்னுள் நினைவுகளோடு
வீசிக் கொண்டு இருக்கின்றன.

அய்யா! நீங்களே
ஒரு வானம்பாடி
மனித இன இதயங்களை
உங்கள் தர்மம், நேர்மை, உண்மை
என்ற சிறகுகளால் வருட வந்த
மனித நேயர்.

மகரந்தம் கலையாத
மலரின் வாசனைக்கு
வசப்பட்டுப் போன
ஒரு வண்ணாத்துப் பூச்சி மாதிரி
என் மனசு
உங்கள் நினைவில்
வாழ்ந்து கொண்டு இருக்கிறது.

உங்கள் சபைக்கு
கனிகள் நிறைய
கனவுகளோடு வந்தேன்
(மரணம்) மூச்சு வாக்கியத்தின்
முற்றுப் புள்ளிக்குப் பின்
இப்பொழுதோ
கண்கள் நிறைய கண்ணீரோடு
திரும்பிப் போகிறேன்.

நினைவில் வாழும்
டி.எஸ்.எம்.எ.அல்கௌதர், டி.பார்ம்.,
கரம்பக்குடி.


No : 7-A Big Bazaar Street. Karambakkudy-Post. Pudukkottai (Dist) Pin : 622302.© 04322 35668

மாண்புமிகு ஜியா பல்லவராயர் அவர்களுக்கு இரங்கல் பாமாலை!!



சமத்துவத்தின் சமுத்திரம் போல் வாழ்ந்தார்
அந்தச் சரித்திரத்தைப் படைத்துவிட்டு மாய்ந்தார்
முக்குலத்தோர் தலைவர் என்றுசிலர் சொல்வார்
எக்குலத்தோர்க்கும் அவரே தலைவராக வெல்வார்

பொதுநலப் புண்ணியராய் இவர் வாழ்ந்தார்
பொதுநலத்தும் கொண்டே சென்று உயிர்பிரிந்தார்
மாமன்னர் பரம்பரையின் முடிசூடா மன்னர்
மக்கள் போற்றும் மனுநீதிச் சோழர்

சிரித்த முகமும் சிங்கார நடையும்
எதிர்பகை போதெல்லாம் எல்லோர்க்கும் தந்தார்
நீதிக்கும் நேர்மைக்கும் நிமிர்ந்தே நின்றார்
பாருலகில் பாப்புகழைப் படைக்கின்ற பாரே!
யாருலகில் இனி அவர் போல் பொதுமலராய் வாழ்வார்

நெஞ்சமோ இமயம் போல் உயர்ந்த நெஞ்சம்,
மனமோ இறைவானம் போல் விரிந்த மனம்
குணமோ இவ்வையகம் போல் பரந்த குணம்,
வேந்தரோ தமிழ்க்குல குண வேந்தர்
புண்ணியரோ பொற்புடைப் புகழ்புவியின் புண்ணியர்!

மாமன்னர் பரம்பரையின் மணி மகுடம்
பாமரர் பரம்பரைக்கும் அவரே மணிமகுடம்
ஆண்டுகள் ஆயிரம் தோன்றி மறைந்தாலும்
அவனியில் ஐயாபுகழ் என்றும் மறையாது

வாடிவிடும் பூமாலையாக இல்லாமல் இந்த
வாடாத பாமாலையை ஜியாவிற்கு அஞ்சலியாக்கி
ஆழ்ந்த அக நெகிழ்வாய் வடிக்கின்றேன் கண்ணீரை!
வணக்கம்! நன்றி!!

11-2-91

வல்லத்திராகோட்டை
இயல்தமிழ்கவிஞன்: மா. சின்னதம்பி ஆசிரியர் சின்னத்தம்பி

★ கலைவண்ணக்கவிஞன் டாக்டர் AS. ரெத்தினசாமி ★

# V. RAJAGOPAL

State First Class Contractor
KADAMPATTI - 622 302. PUDUKKOTTAI DT.

555

Residence :
Phone :

**244, Philomina Nagar, 3rd Street, Nanjikkottai Road, THANJAVUR-613 006**


Date

மனித நேய மாண்பாளர் அய்யா திரு. பல்லவராயர் அவர்களைப் பற்றிக் கூற வார்த்தைகள் இல்லாவிடினும் நான் என் வாழ்க்கையில் அய்யாவின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வாழ்க்கையில் முன்னேறி வந்த காரணங்களைச் சுருக்கமாக இங்கு கூறுகிறேன்.

நான் பூமியைப் போல் அய்யாவிடமிருந்து பொறுமையைக் கற்றேன்.

நான் காற்றைப் போல் அய்யாவிடமிருந்து அனைவருடனும் பழகும் தன்மையைப் பெற்றேன். நான் தீயைப் போல் அய்யாவிடமிருந்து தீய எண்ணங்களைப் பொசுக்கும் மேன்மையை பெற்றேன்.

நான் நீரைப் போன்ற அய்யாவிடமிருந்து விடாமுயச்சியால் எதுவும் நடக்கும் என்ற உண்மையைப் பெற்றேன்.

நான் வானத்தைப் போல் அய்யாவிடமிருந்து கொண்ட கொள்கையில் விடாமல் இருக்கும் உள்ளத்தைப் பெற்றேன்.

நான் சூரியனைப் போல் அய்யாவிடமிருந்து இன்னா செய்தார்க்கு இனியவை செய்யும் எல்லோரையும் சமமாக கருதும் பழக்கத்தையும் கற்றேன்.

நான் சந்திரனைப் போல் அய்யாவிடமிருந்து வாழ்ந்தாலும் தேய்ந்தாலும் தன் நிலை மாறாத தன்மையைப் கற்றேன்.

நான் மேகத்தைப்போல் அய்யாவிடமிருந்து கள்ளமில்லாத கருணை மழை பொழிவதைக் கற்றேன்.

நான் ஆற்றைப்போல் அய்யாவிடமிருந்து நிற்காமல் ஓடி லட்சியம் அடைவதைக் கற்றேன்.

நான் மரத்தைப் போல் அய்யாவிடமிருந்து தீங்கு இழைப் போரிடமும் பெருந்தன்மையோடு இருக்கக் கற்றேன்.

இவ்வளவையும் கற்றது ஒருபள்ளியில் அல்ல. அது ஒரு பல்கலைகழகம் பண்பாட்டுக் கழகம் அய்யாவின் உடல் அழிந்தாலும் உங்கள் புகழ் இவ்வுலகில் அழியாமல் இருக்க எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறேன்.

காடம்பட்டி
வி. ராஜகோபால், நாயுடு.

கோ.டேவிட் செல்லையா
தலைமை ஆசிரியர், டி.இ.எல்.சி. தொடக்கப்பள்ளி
கரம்பக்குடி

# 20ம் நூற்றாண்டின் நடமாடும் நீதிமன்றம்

1. *புதுகை மாவட்டத்தில் ஒளிவிளக்காகத் திகழ்ந்த அமரர் உயர்மிகு துரை.விஜய ரெகுநாத பல்லவராயர் அவர்கள் இயேசு கிறிஸ்துவின் வாக்கின்படி தமது வாழ்க்கையில் ''சமாதானப் பிரபுவாகத் திகழ்ந்தார்கள்'' என்றால் அது மிகையாகாது. இயேசு கூறினார்: சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனுடைய புத்திரர் எனப்படுவர்'' என்று மத்தேயு 5:9ல் கூறப்பட்டுள்ளது.*

2. *அது மட்டுமின்றி அவர்கள் ''நடமாடும் நீதிமன்றமாக'' விளங்கினார்கள் என்று ஆணித்தரமாகக் கூறலாம். நீதிமன்றத்தை நோக்கி பலவித செலவுகள் செய்து செல்வார்கள். ஆனால் இவரிடம் சென்று அதாவது இலவசமாக நடமாடும் நீதிமன்றத்தை அணுகி, அரிய பெரிய சாதனைகள் புரிந்துள்ளார்கள் என்றால் அது வரலாற்றில் இடம்பெறக் கூடிய அரிய சாதனையாகும்.*

3. *ஏழை, எளிய மக்களால் கருணை உள்ளத்தோடு தனது ஒன்றிய யூனியன் தலைவர் பதவியைப் பயன்படுத்தினார்கள். கல்வியின் பால் நாட்டம் கொண்டு ஏழை மாணவர்களை படித்து முன்னேற பேருதவி புரிந்துள்ளார்கள். விளையாட்டில் அலாதி பிரியராக விளங்கினார்கள். இவ்வாறாக பல்கலைக்கும் இலக்கணமாகத் திகழ்ந்தார்கள் அய்யா பல்லவராயர் அவர்கள்.*

---

**மு.சேக் அப்துல்லா,** டி.சி.இ
68, கச்சேரி வீதி,
கரம்பக்குடி.

---

அரசப் பரம்பரையில் பிறந்து
எளிமையாய் வாழ்ந்தீர்
மனிதகுலத் தலைவராய் இருந்து
மனிதநேய மாண்பாளராய் ஆனீர்
நீதி காக்க சோழனாய் இருந்தீர்
கண்ணை இமை காப்பது போல
பள்ளி பல காத்தீர்
வெற்றியின் உச்சிக்கே சென்ற பின்பும்
புன்னகையே வெற்றியாய் கொண்டீர்

ஊர் கூடி உமை ஆளாக்க
சேர்மன் எனும் பெயர் கொண்டீர்
தேர் கொண்டு தோள் சுமக்க நாங்கள் இரு...
எளிமையாய் இருந்தீர்
நில்லாது ஊருக்கு உழைத்தீர்
நீங்காது இருப்பீர் எங்கள் உள்ளத்தில்
நீவிர் பெற்ற பெருமைகள் எழுத்தில் அடங்...
என்றும் காப்போம் உந்தன் பண்புகளை
என்றும் உந்தன் வழியினிலே அய்யா.

---



---







அரசியலில் நேர்மை | பொது வாழ்வில் தூய்மை | லட்சியத்தில் உறுதி

**மனிதநேய மாண்பாளர் அய்யா பல்லவராயர் அவர்களின்**
**மணி மண்டபம் முழு உருவச்சிலை, நினைவு மலர் விழா சிறக்க**
**மனிதநேய மாண்பு மலர புத்தாண்டு 2000 வழிவகுக்க வாழ்த்துகிறோம்**

# வாழ்த்தும் அன்பு நெஞ்சங்கள்

| | |
|---|---|
| **K.A. ஆரோக்கியசாமி**<br>ஊ.ம.தலைவர்<br>ம.தி.மு.க. மாவட்ட துணைச்செயலர் | **K. சேதுமாதவன்**<br>ம.தி.மு.க. ஒன்றியச்செயலர்<br>பெற்றோர் ஆசிரியர் சங்க தலைவர் |
| **இரா. தங்கமணி**<br>ம.தி.மு.க. ஒன்றிய அவைத்தலைவர் | **வீ. இராமசாமி (கவுன்சிலர்)**<br>ம.தி.மு.க. நகரச்செயலர் |
| **ரெ. துரைச்சாமி**<br>ஒ.து. பெருந்தலைவர் | **த. மாணிக்கவாசகம்**<br>ஒன்றிய கவுன்சிலர் |
| **குற்றாலிங்கம் பிள்ளை**<br>ம.தி.மு.க. நகர அவைத்தலைவர் | **M. சுந்தர்ராசு**<br>ம.தி.மு.க. கிளைச்செயலர் |
| **ச. கணேசன்**<br>ம.தி.மு.க. நகர துணைச்செயலர் | **R. சின்னப்பா**<br>ம.தி.மு.க. நகரப்பிரதிநிதி |
| **து. விஸ்வானந்தம்**<br>ம.தி.மு.க. | **கோ. வெங்கடாசலம்**<br>சத்துணவு அமைப்பாளர் |

**க. சுப்பிரமணியன்**
நகல் பத்திர எழுத்தர்
ம.தி.மு.க. கிளைச்செயலர்

மணிமண்டபம் திறப்பு, நூலகம் திறப்பு, திருவுருவச் சிலை திறப்பு மலர் வெளியீடு, அறக்கட்டளைத் துவக்கம் உள்ளிட்ட ஐம்பெரும் விழாச் சிறக்க வாழ்த்துகின்றோம்!

| தோற்றம் | மறைவு |
| --- | --- |
| 05.12.31 | 11.02.1999 |



*''தூய தொண்டிலே இறைவன் இருக்கின்றான்!''*
*- அய்யா - பல்லவராயர் -*

இங்ஙனம்

**பெண்கள் உயர்நிலைப்பள்ளி- பெற்றோர் ஆசிரியர் கழகம்**

| *தலைவர்:* | *துணைத் தலைவர்:* | *செயலர்:* |
| --- | --- | --- |
| **விஜய.ரவிபல்லவராயர்** B.Com., | S. **அல்லாபிச்சை** | P. **ராஜேந்திரன்** M.A.B.Ed., தலைமையாசிரியர் (பொறுப்பு) |

*பொருளர்:*
G. **நாகமுத்து** M.A.B.Ed.,

*மற்றும் உறுப்பினர்கள், ஆசிரியர், ஆசிரியைகள்*
*மாணவியர்கள் - அலுவலக ஊழியர்கள்*

## If you Plan for a Decade
### - Plant Trees ;
## If you Plan for a Century
### - Teach the Children

என்ற பொன்மொழிக்கு ஏற்ப வாழ்நாள் முழுதும் குழந்தைகளின் கல்விக்கும் சமூக அமைதிக்கும் தன்னை அர்ப்பணித்து பெரியார், அம்பேத்கார், காமராஜர் வழி நின்று வாழ்ந்து மறைந்த அய்யா. விஜயரெகுநாத பல்லவராயர் அவர்களின் மலர் சிறக்க வாழ்த்துகிறோம்.



போன் :
55328

இங்ஙனம்
தலைமை ஆசிரியர்,
ஆசிரிய ஆசிரியைகள் அலுவலர்கள்
பெற்றோர் ஆசிரியர் கழகம்
கட்டிடக்குழு
அரசு மேல்நிலைப்பள்ளி, கரம்பக்குடி

# குத்தூஸ் மெட்ரிகுலேஷன் பள்ளி

**கரம்பக்குடி - புதுக்கோட்டை**
**அரசு ஆணை எண். 94847/E5/99 DT. 30/9/99**

**அனுபவமும், ஆற்றலுமிக்க ஆசிரியர்களைக் கொண்டு மாணவர்களுக்கு சிறந்த பயிற்சி அளிக்கப்படுகிறது.**

## சிறப்பு அம்சங்கள்

அனுபவமிக்க ஆசிரியர்கள் கணிப்பொறிப் பயிற்சி ஸ்போக்கன் இங்கிலீஷ் பரந்த விளையாட்டுத் திடல் சொந்த கான்கிரீட் கூரையில் அமைந்த கட்டிடம் குடிநீர், வேன் வசதி



# கோல்டன் ஐ.டி.ஐ.

**கரம்பக்குடி**

சிறந்த பயிற்சி! குறைந்த கட்டணம்! அதிக வேலை வாய்ப்பு!

**மத்திய - மாநில அரசுகளின் நிரந்தர அங்கீகாரம் பெற்றது.**
**அரசு ஆணை எண். DGET NO. 6/22/5/98 - TC**

| அரசு உதவித் தொகை | பயிற்சி பிரிவு | காலம் | கல்வித்தகுதி |
|---|---|---|---|
| இலவச விடுதி வசதி பஸ் பாஸ் எடுத்துத் தரப்படும் | பிட்டர்<br>எலக்ட்ரீசியன்<br>டீசல் மெக்கானிக் | இரண்டாண்டு<br>இரண்டாண்டு<br>ஓர் ஆண்டு | S.S.L.C. தேர்ச்சி முதல் டிகிரி வரை |

குறிப்பு : இந்த ஆண்டு முதல் அரசு உத்திரவுப்படி பெண்களுக்கான 33% இட ஒதுக்கீட்டின்படி பெண்கள் சேர்க்கை நடைபெறுகிறது.

விழா சிறக்க வாழ்த்துகிறோம்



தொலைபேசி : 04372
41700

தரம் நாடுவோர்க்கு

# விநாயகா ஜுவல்லர்ஸ்

ஊரணிபுரம்

22 Ct. தங்க வெள்ளி நகைகள் ஆர்டரின் பேரில்
குறித்த நேரத்தில் உத்திரவாதத்துடன் செய்துத் தரப்படும்.
நியாயமான விலையில் வழங்குகிறோம்.

உரிமை :
A. சீனிவாசன்
C. சீமான்

நீதி அரசர் மனித நேய மாண்பாளர்
துரை. விஜய ரெகுநாத பல்லவராயர் புகழ் வாழ்க!

*உண்மையாய் உழைப்பவர்க்கு ஊரே துணை நிற்கும்.*
*நல்லவனாய் வாழு நாடே உனைப் போற்றும் – இதை*
*நாட்டுக்கு உணர்த்தவே – இனி*
*ஊருக்கு உழைப்பவர் உண்மையாய் உழைக்கவே*
*எங்கள் நன்றியைக் காட்டினோம் – நாட்டுக்கு உணர்த்தினோம்.*



ஊருக்கு உழைத்து உயிரையும் கொடுத்த உத்தமரே
ஊரே உமைப்போற்றும் – உம் வழியில் தான் நடக்கும்

*இங்ஙணம் :*

**ஊராட்சி ஒன்றிய அனைத்துத் தொடக்க**
**நடுநிலைப்பள்ளி ஆசிரியர்கள்**

கரம்பக்குடி.

ஸ்ரீ பத்திரகாளியம்மன் துணை

"வாழ்ந்தவர்கோடி மறைந்தவர் கோடி
மக்களின் மனதில் நிற்கின்ற அய்யா
அவர் புகழ் ஓங்க நிறைந்த மனதுடன் வாழ்த்துகிறேன்!"



சரியான எடை

நியாயமான விலை

ஸ்ரீ அருள் முருகன் - ரைஸ் - கடலை மில்
(அம்பாள்)
113, காந்திரோடு,
ஆலங்குடி

போன் :
மில் : 51459
வீடு : 51885

உரிமை :
கோ. செல்வராஜ்
ஆலங்குடி

சகாப்தம்



முடியவில்லை!

தொடர்கிறது...

